உ

திருச்சிற்றம்பலம்.

திரு அச்சிறுபாக்கம் கருணீகதுல திலகர்

பச்சைப் பிள்ளை

யென்றறியப்படும்

ஸ்ரீ நித்த சுத்தானந்த சுவாமிகள்

அருளிய

# திருப்பாமாலைகள்

இவை

ஷை சுவாமிகளதன்பர்கள் பலர்தம் வேண்டுகோட்கிணங்க

அச்சிற் பதிப்பிக்கப்பட்டன

சென்னை :

"கார்டியன் அச்சியந்திரசாலை"

—

ரோதிகிருது ஹு புரட்டாசிமீ

உ

திருச்சிற்றம்பலம்




திரு அச்சிறுபாக்கம் கருணீககுல திலகர்

பச்சைப் பிள்ளை

யென்றறியப்படும்

ஸ்ரீ நித்த சுத்தானந்த சுவாமிகள்

201

அருளிய

# திருப்பாமாலைகள்

இவை

ஷி சுவாமிகளதன்பர்கள் பலர்தம் வேண்டுகோட்கிணங்க

அச்சிற் பதிப்பிக்கப்பட்டன

சென்னை:

"கார்டியன் அச்சியந்திரசாலை"

---

விரோதிகிருது௵ புரட்டாசிமீ






சிவமயம்.

இன்பீநித்தசுத்தனடியவ
ரன்பாய்ச்சாற்றுகவியிதுவாமே.

## நேரிசை ஆசிரியப்பா

மங்கையர்க் கரசு மாதிளங் கிளியாட்
டங்கு பாகத் தோடெழிற் குலவுந்
திங்கள் வேணியான் றீனருக் கெளியான்
பொங்கரு ளதனைப் போற்று னெஞ்ச
னச்சிற்ற பாக்கப் பச்சைப் பிள்ளை
மெச்ச மேலோன் நித்த சுத்தன்
பொய்கட் போக்கப் போற்றும் பாமா
லைக ளைந்தையு மவனடி பரவி
யுய்வழி யடைவா னுற்றவ டியர்யா
மைய யீயுன் பாக்க ளென்று
சாற்ற வீந்தான் சற்குண னெமக்கே
யேற்றின மவைதமை யெவரு மறியவச்
செழுத்துமு தலைந்தின் லக்கண முணர்ந்தவர்
வழுக்களை வகையாய்த் தேட லுற்றே
சிற்சில வசைகட் செப்பலு முறுவ
ரற்ப மாலைக ளிவையென வறைதலு
மென்னினு மவரே யெம்மிறை யவன்றன்
பொன்னடி தொழவு மன்னவன் விளக்குந்
தேசுறு பெருநெறி தெளியிற் பின்னர்
பூசனை புரிதற் கேற்றவா சகமா
மாதவி னவர்க்கன் பாய்ப்பின்
ஞேது வார்க்கிவ் வுண்மையொ ளிருமால்.






உ

சிவமயம்

# ஸ்ரீ ஆட்சீஸ்வரர் அருள்குறிமாலை

## ஆசிரிய விருத்தம்

பத்தியோசிறிதுமில்லேன்பாரிடைப்பதைக்கலுற்றேன்
சத்தியாயுனதுசார்பிற்சார்ந்தமின்கொடியினோடு
நித்தமும்விழிகளாரநேயமாய்த்தரிசிப்பானென்
னத்தவச்சிறுபாக்கீசாவாசையானடைந்துளேனே (1)

பொய்யெலாந்திரட்டியொன்றாய்ப்பூட்டகம்புரியுமெய்யைப்
பொய்யெனவறிவித்தாண்டபோதனின்னருடனக்கோர்
கைபதிலெதுவுமில்லேன்காதலாகருணைமிக்கோய்
ஐயவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (2)

பொய்யானமெய்ம்மையென்றேபோற்றிடுமதியிலிந்தப்
பையலுக்குறுதிசொன்னபார்த்திபாபரமனேயுன்
செய்யதோரடிகளென்றன்சென்னிதன்முடியதாக
ஐயவ்ச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (3)

என்பொடுநரம்புதோலுமீளையோடுதிரஞ்சேர்ந்த
வன்புழுக்குரம்பைதன்னில்வாழ்தலாலுனையின்றேத்தேன்
என்பொலாமணியேயென்னையாண்டிடரொழித்துகாத்த
வன்பவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (4)

செய்வனதெரிந்திலேனுன்சீரிலாச்சிறியனேனென்
பையலுக்கன்பையீயும்பாரமுன்னருட்கேகண்டாய்
தையலோரிளங்கிளிப்பெண்றன்னைனீங்காமனின்ற
வையவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (5)

போதெலாங்கழியனின்றுபொய்ப்புழுமலக்கூடுற்றுச்
சாதுபோலிருந்தவெற்குச்சங்கராவருளளித்தாய்
கோதிலாக்குணத்தின்மிக்கோய்கோவுனீகுருவுனீயே
நாதவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (6)

காலற்குக்காலனாகிக்காலமுங்கடந்துனின்றாய்
பாலற்குஞானப்பாலைப்பண்புடனளித்தவள்ளால்

சாலவிக்கொடியேன்பாலுஞ்சாதனனிறையவைத்தாய்
ஆலமுமமுதாக்கொள்வோயச்சிற்றபாக்கத்தானே. (7)

கல்லெனுமனத்தனுகிக்காலன்றன்னூரனுகிப்
பல்வகைச்சனனங்கொண்டுபடுந்துயரெனதுவாற்
சொல்லவோவல்லியனல்லன்சோதியேயறிந்திடாயோ
நல்லவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (8)

எந்தெந்தத்தலங்கடோறுமெம்பிரானருட்கோலத்தை
வந்தடியார்கண்காணவாண்டவர்க்கருளளிப்பாய்
பந்தபாசங்களென்னைப்பற்றுமலாண்டுகொள்வாய்
அந்தவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (9)

எத்தனையோநாள்கள்முன்னூரோடலெடுத்தேயாட
லத்தனைபிறப்பிலெல்லாமப்போதப்போதுகாத்த
சித்தவெல்லாமும்வல்லசீர்பொழிவிளையாட்டானே
அத்தவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (10)

காலங்கடோறுமுன்றன்காதலர்தமதுகூட்டஞ்
சாலவுனலத்ததாகுமாலயங்தொழுதலென்றே
கோலமாருனதுகோவிற்கூடவுமெனையுஞ்சேர்ப்பாய்
சீலவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (11)

உனதுபேராலயத்திலுன்னதுபணிசெய்வோர்கள்
கனதனமணிகளாடைகாதலாயுன்னும்வண்ணம்
அனவரதமீயுமாறிங்காற்றல்யானடையவேண்டிப்
புனல்மலிசடையினுயுன்பொற்றுளைப்போற்றினேனே. (12)

எத்தனைவிதங்களாகவீறிலாவிடர்களுற்றும்
பத்தியதிலனுனேனும்பண்ணெடுபாடேனேனும்
சித்தனேயெனையுமாளச்சீரியானினைந்ததேதோ
வத்தவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (13)

சித்தனுயெலாம்வல்லானுய்ச்சீருடைவிளையாட்டாடும்
முத்தனேமுதல்வாதில்லைமூதூரிலென்னையாண்டாய்
பித்தனென்சொலிலேதேனும்பின்னம்நேராதுசெய்வாய்
அத்தவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே (14)

என்செய்கையாவதெல்லாமுன்செய்கையாதலாலென்
றன்செய்கையாதுமில்லைத்தாரணியதனிற்கண்டாய்
புன்செய்கைக்குள்ளீடாகிப்பூதலம்வராதாள்வாயே
அன்பவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (15)

கற்றதொன்றறியேன்கேள்விகற்பனையொன்றுமில்லேன்
பற்றறப்பற்றேனேனும்பாசமதுடையனேனும்
நற்றவாயெனையுமாளநானெனபுரிந்துளேனே
உற்றவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (16)

சொல்லினுன்மனத்தினுனுஞ்சோதியேதொடரொணுதாய்
பல்வகைவிரதம்பூண்டுன்பாதமேபரவலில்லேன்
தொல்லுலகதனிற்றீயேன்றேயாதவண்ணமாள்வாய்
நல்லவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (17)

பட்டபாடுகணினைந்துபார்க்கமுன்றயருண்டாகுங்
கெட்டனுள்போதுமென்றேகேடிலாக்கிருபைவைத்தாய்
சிட்டர்கள்போற்றவாழுஞ்சிற்றம்பலத்துளானே
தொட்டவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. 18)

உருவிலிதனையெரித்தாளுத்தமநகையாய்போற்றி
சருவசங்காரபூதிதாரணைகுருவேபோற்றி
அருவினையுருதவண்ணமாண்டருள்துரையேயெந்தாய்
பெரியவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (19)

நேற்றுளாரின்றுளாரோநேரமிங்கிலையேயுன்ன
சோற்றினைத்தினமுமுண்டேசோர்வுடன்கழித்துனுளை
காற்றளர்ந்தோடியோடிக்காட்டினிவிடுபடாமுன்
ஞற்றடைசடையினனேயாதரித்தருளுவாயே. (20)

பார்த்தவர்பழித்ததெல்லாம்பாரினிற்பொறுக்கலானேன்
கார்த்தனனுனதடிக்கேகாரணகடவுளானே
சேர்த்திடாய்நடனந்தன்னைச்சேவித்துனுளுனுளு
மார்த்திடுமடியரோடுவப்பவாக்ஷீசவள்ளால் (21)

பாடவுமறியேனுன்னைப்பற்றறப்பரவகில்லேன்
ஆடவுமறியேனுன்றனருள்பெறவுனுடேன்
தாடலையணைத்தேயென்னைத்தாணுவேயருளெனக்குன்
பாடலச்சிறுபாக்கத்திலாட்சிகொண்டருளுவோனே. (22)

நால்வகையரியசாதனங்கணுனுடேனேனும்
கால்வழியடியனுகக்காதலையடைந்துளேனல்
மால்கொண்டுமாயைதன்னில்மாய்ந்திடாவணமருள்வாய்
சாலவச்சிறுபாக்கத்திலாட்சிகொண்டருளுவோனே. (23)

எவரெவைநினைத்தபோதுமீந்தவர்க்கருள்வாய்போற்றி
தவரெவரவரெவர்க்குஞ்சாதனந்தருவாய்போற்றி

பவ்மதையொதுக்கியாளும்பாரமிங்குனக்கேயன்றே
சிவனேயச்சிற்றபாக்கம்சீருடனமருவோனே. (24)

எந்தைனின்னடியரெல்லாமேத்தினின்னடியையுன்னுப்
பந்தபாசங்கடீர்ந்துபாரவூழ்நீத்தலேபோல்
அந்தமாமெனதுசிந்தையானந்தனீங்காவண்ணம்
இந்தனுளருளிடாயோயச்சிற்றபாக்கத்தானே. (25)

சிவபெருங்கருணைவள்ளால்சீரிலேற்கருளிமுற்றும்
பவமதையொழித்தேயாளப்பாக்கியமுனென்செய்தேனே
நவநவவினோதமுள்ளநானிலத்துயரினுஞ்சே
ரவமருத்தருளாகூஷ்சாவப்பனேயருளிடாயே. (26)

வந்தவாறதனையெண்ணவல்லகத்தவர்கள்போலச்
சிந்தனைபலவாறுகிச்சீரிலேனெனையுமாண்ட
வெந்தையெம்மானேமுக்கணீசவுள்ளிருந்துமெட்டாய்
அந்தவச்சிறுபாக்கத்திலாட்சிகொண்டருளுவோனே. (27)

பூவுலகெலாமுமெங்கும்பொன்னடிதொழுதுனின்று
பாவெனவுருகியாடும்பண்புளவடியர்கூட்டங்
கோவிலினிறைந்துனிற்குங்கோதிலாத்திருவைக்காண
தாவினின்னடியைச்சிந்தைனுட்டினேனருள்செய்வாயே. (28)

ஆலயங்கடோறுமுன்றனன்புளவடியார்கூட்டம்
சாலவேநிறைந்துமேன்மைசான்றனின்னருளைப்பாட
சீலமில்சிறியனேனுஞ்சேர்ந்துமேயுருகவேண்டி
கோலமாருனதுதாளேகோயிலென்றடைந்தவாறே. (29)

பப்பற்றவீட்டிருந்துன்பாங்குளவடியர்கூட்டஞ்
செப்பல்செய்வினைகளின்றிச்சீரருளைதிர்நோக்குற்றே
வொப்புடனிருப்பதொத்துனுனுமோரடியனுக
வப்பவச்சிறுபாக்கத்திலாட்சிகொண்டருளுவோனே. (30)

மாண்டனின்பெருமையன்றிமண்ணினிற்கருதேனென்றை
வேண்டிடுமெனைத்துமன்பாவேண்டியபடியீவோனே
நீண்டதோர்மலத்தைநீக்கிநின்மலவடியர்தம்மை
யாண்டனுயகனேயாகூஷியப்பனேயெனையாள்வாயே. (31)

அப்பனீயனையுனீயென்னுருயிர்த்துணையுனீயே
செப்பிடுவசனனீயேசெய்தொழிற்காரணனீயே
தப்பேதுஞ்சேராவண்ணம்தக்கவாறருளிடாயே
வப்பவச்சிறுபாக்கத்திலாட்சிகொண்டருளுவோனே. (32)

வல்லரக்கனவன்கையால்வாழ்ந்திடுங்கயிலைதன்னைக்
கல்வியேயசைத்துமுன் றன்கண்ணியகருணைகொண்டான்
தில்லைவாழ்நாதவெற்குத்தீரமாயருளவென்றே
நல்லவச்சிறுபாக்கத்திலாட்சிகொண்டருளுவோனே. (33)

அருமறுகுவில்வங்கொன்றையாத்திமாமாலைதும்பை
மருமருக்கொழுந்துமுல்லைமல்லிகைமணமும்வீசத்
திருவுருக்கணிந்துதில்லையம்பலத்தாடுவோனே
பெருமையச்சிறுபாக்கத்திலாட்சிகொண்டருளுவோனே. (34)

பாதிரிப்பூவும்வேரும்பாதத்திற்றூவினின்றே
வாதியேயரவுசூடியம்பலத்தானேயென்று
கோதுளேன்குறைகணிக்கிக்கூறவாட்கொளல்நீயென்றே
நாதவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (35)

கொக்குமந்தாரையோடுங்கோதிலாக்கமலத்தோடும்
அக்குனற்றொடைகள்சூடியாடுவாய்நடனமென்றே
குக்கலிற்கொடியனுனுங்கூறினேனடியன்போல
தக்கதென்றருளாயெந்தாய்தாயினுங்கருணைமிக்கோய். (36)

சீலமேலோங்கிவாழச்செய்புனல்விரதமின்றிக்
காலங்கள்வீணேபோக்குங்காலரோடென்கூடாமற்
பாலன்மேற்பட்சம்வைத்துப்பற்றலுன்கடமையன்றே
கோலவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (37)

வேதவாகமபுராணம்வேணசாத்திரங்கள்கேட்டும்
சாதனைமிகவுளாராய்ச்சார்ந்திலர்பெரியர்தேகம்
தீதுளேன்றிகைத்துனின்றேன்றெய்வமேகருணைவைப்பாய்
நாதவச்சிறுபாக்கத்திலாட்சிகொண்டருளுவோனே. (38)

சத்தியனிறைந்துனின்றசற்சனர்போலென்னுளும்
நித்தியபொருளைச்சார்ந்துநீங்காதார்போலுனல்ல
முத்தர்போல்வேடங்கொண்டார்மோசத்திலாழாதாள்வாய்
அத்தவச்சிறுபாக்கத்திலாட்சிகொண்டருளுவோனே. (39)

கரியினையுரித்துபோர்த்துங்காலனையுதைத்துமுன்றன்
அரியவன்பினர்தமக்கேயார்வமாயருளுவோனே
நரிபரியாகச்செய்தாய்நல்வாதவூரர்க்காக
அரியவச்சிறுபாக்கத்திலாட்சிகொண்டருளுவோனே. (40)

ஆக்கடாம்பலவாய்க்கூடியப்பனேமழையிலாக்கால்
போக்குடன்வரவுமாகிப்புல்லுடன்புனலுந்தேடி

எக்கிடாவணங்குளத்தையின்புடன்றிருத்துவோர்க்கிங்
காக்கனற்புதல்வர்ஞானமன்புடனருளுவாயே. (41)

எங்தெந்தச்சீவன்ஞனுமேங்கியேமழையிலாது
வந்துமேவருந்தலின்றிவாழவச்சிறுபாக்கத்தில்
அந்தமாய்க்குயில்கள்கூவவானந்தமஞ்ஞையாட
நந்தனவனங்களோடுநல்வளமருளுவாயே (42)

வாய்மதத்தொழிலினேடுவாரமேயிலாவகத்தால்
பேய்மதமடைந்துவீணேபேசிடுஞ்சிறியர்போல
நோய்மதங்கொளாதென்மேலும்நோக்கம்வைத்தாண்டுகொள்வாய்
நேயவச்சிறுபாக்கத்திலாட்சிகொண்டருளுவோனே. (43)

சொல்லொடுந்தொழிலினேடுஞ்சோர்வுளசிறியரோடுஞ்
செல்லுமென்மனத்தினேடுசேர்ந்ததாலெனையிங்குற்ற
தொல்லையின்வினைபோம்வண்ணந்தூய்தானசாக்ஷிநல்காய்
நல்லவச்சிறுபாக்கத்திலாட்சிசொண்டருளுவோனே, (44)

வாக்கியமிகுதியாகவம்புகள்வழங்குமாந்தர்
தாக்குறவடியனெந்ததாழ்ந்தஜென்மத்தும்வேண்டேன்
நாக்கினுலருளைப் பாடநாயினுமிழிந்தவெற்குப்
பாக்கியமருளச்சிற்றபாக்கத்திலாக்ஷிகொண்டாய். (45)

இத்தனை தினங்கள்போலவேழையேன்பயனிற்சொற்கள்
பித்தனய்ப்பிதற்றினின்றேன்பேறிதென்றறியகில்லேன்
கத்தனின்கருணைகாட்டிக்காட்சிதான் தருவதென்றோ
அத்தவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (46)

முத்தனய்முதல்வனனமூர்த்தியேமுனிவர்கோவே
சித்தனயுயிர்கடோறுஞ்சேர்ந்தொளிர்பரமவெந்தாய்
சுத்தனயிருக்குமுன்றன் றூயநல்லடியைக்காட்டாய்
அத்தவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (47)

எத்தனைஜெனனம்யானுமெந்தையேயெடுத்துநின்றேன்
அத்தனைபிரிவுதோறுமார்வமில்மனத்தனேனேன்
சுத்தனயினியென்னுளுஞ்சோதியேயிருக்கவாள்வாய்
கத்தவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (48)

அச்சிற்றபாக்கந்தன்னிலானந்தவாலயத்திற்
கச்சிதமாயெந்தனுளெக்காலமும்விதிவழாது
மெய்ச்சித்தத்தார்தமோடுமேவியேயிருக்கநல்காய்
உச்சிதவருளைநல்குமுத்தமபிரானேபோற்றி. (49)

திங்களையரவைக்கங்காதேவியைமுடியிற்சூடி
அங்கியைக்கரத்திலேந்தியாலத்தைநெஞ்சிற்றுக்கிப்
பங்கஞ்செய்மண்டையோட்டில்நாளுமேபலிகள்செய்தே
எங்கணுனிறையுமாக்ஷியீசனேயிறைவபோற்றி (50)

வருநிதிகுறைவிலாமல்வாழளகிறைவன்போலப்
பெருகிடுமரியவாழ்வைப்பேணுநல்லடியர்க்கீவாய்
இருநிலத்தெவராலென்றுமேச்சிலாதருள்வாய்போற்றி
அரியவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (51)

மானிலத்தரசுசெய்யுமன்னனெனென்மனத்திருக்கந்
தானதையறிந்துநாடிதாணுவேவிரும்புமெல்லாந்
தானமேபுரியும்வண்ணம்தம்பிராதயவுவைப்பாய்
ஞானவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (52)

மறைமுடிதனிலென்னளுமானடம்புரியுமெந்தாய்
குறைவிலாதடியர்சித்தங்கோயிலாய்வளருங்கோவே
நிறையுனின்பரிசனத்தோடென்னையுனிறுத்துவாயே
பிறையணிசடையினனேபேயனேன்மடமைதீர்த்தே. (53)

அருள்படைத்தநந்திகேசராக்கினைக்கயிலைதன்னிற்
பிரமனுமடையவொண்ணப்பேரருள்வளரவைத்தோய்
மருளெனுமயக்கமாறறிமாசுதீரடியார்கூட்டத்
திருவினையருளாயாக்ஷியீசனேயெளியனேற்கே. (54)

அடிமுடினடுவுமில்லாவானந்தமாகினனே
படிமிசைக்கடவுள்மூவர்பண்ணவனுருத்ரன்மாலாய்
நொடியினிற்றொழில்கள்மூன்றுனுட்பமாய்நடத்தியென்றும்
நடிக்குமெம்பிரானேயாரும்நாடரும்பதத்தினனே. (55)

அந்தமுனடுவுமில்லாவன்பினரகத்துணின்றாய்
சொந்தமாய்மயலைநீக்கிச்சொல்லிடவரியதான
வந்தமில்லருளைநல்கித்துன்பிலாநெறியிற்சேர்ப்பாய்
எந்தையச்சிறுபாக்கத்திலின்புடனமருவோனே (56)

அத்தமுமுதையந்தானுமங்கிலையென்றுமென்பார்
சுத்தமுமசுத்தந்தானுஞ்தோன்றுதசோதியென்பார்
நித்தனேயெனக்குமந்தனின்மலநிலையைநல்காய்
அத்தவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவாயே. (57)

நித்தனின்மலமுமாகிநேயமிக்குடையதாகிச்
சுத்தமாய்ச்சமீபமாகித்தூரமாய்த்துரியமாகிச்

சித்தமாய்ச்சிவமுமாகிச்சின்மயசொரூபமான
வத்தவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவானே. (58)

நீண்டமாலயனுந்தேடநின்றனைபெருநெருப்பாய்
தூண்டிடாதெவருந்தானாய்ச்சோதியாய்நின்றவண்ணால்
மாண்டவர்மனத்திநீங்காவள்ளலாய்வாழ்கின்றோய்நீ
வேண்டியச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவானே. (59)

முப்பதோட்டறுபத்தாறுமோதுதத்துவங்களென்னைக்
கப்பிடாக்கரையாமுத்திக்காட்சியைத்தருவதோடு
செப்புனானென்னதிங்கென்னுஞ்செய்கைநீத்துனையேயேத்த
வ்ப்பவாக்ஷீசாவிந்தவேழையேற்கருள்செய்வாயே. (60)

மையலேசொந்தவில்லாய்வாழ்கின்றமாதர்கள்பால்
நையலேதொழிலாய்நாளும்நாயினுங்கொடியனானேன்
பையலென்றிரங்கியாளப்பாக்கியமுமேதோகாணேன்
ஐயவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (61)

செப்பெனுமுலையார்தம்பாற்சிந்தைவைத்தொழுகுமூடன்
கப்பிடுமுடிவதில்லாமாயையாற்கருதிவந்த
வப்பனுமனையுமுள்ளவைங்கோசப்பாசமூழ்கா
தெப்படியேனுமாக்ஷியீசனேயருள்செய்வாயே. (62)

மூப்பொடிங்கிறத்தலின்றிமுன்னெழுனரையுமின்றிக்
காப்பவனுனையல்லாமற்கர்த்தர்வேறின்றிங்கென்றே
மாப்பிணைதழுவனின்றமாதொருபாகத்தானே
பூப்பிணைதிருந்துனல்லபொன்னடிவணங்கினேனே. (63)

சத்திகளனேகந்தோற்றுஞ்சர்வமாம்பொருளாய்நின்றோய்
சத்திகளனேகந்தோற்றுஞ்சர்வமுமொடுங்கநிற்பாய்
சத்தினின்னருளாந்தீக்ஷைசார்ந்துனன்னிலைநின்றோற்கச்
சத்ததாமுலகங்காட்டும்சாமியெற்கருளுவாயே. (64)

சத்தியைப்பரவகில்லாச்சா[illegible]னலமதாமோ
சத்தியைநினையாமூடச்சாதனநிலைவிட்டேங்கச்
சத்தியையென்றுனோக்குஞ்சாதனமவுனந்தன்னைச்
சத்தியையுடையவாக்ஷீசாதயைபுரிகுவாயே. (65)

முத்தியைவிரும்பிமுன்னோர்மோனமேயடைந்துனின்று
முத்திவீடதனில்வாழ்ந்துமுன்பினிற்சுகமடைந்தார்
முத்தியானெறியெனக்குமும்மலந்தனைநீறாக்கி
முத்தனேயருளாக்ஷீசாமூடனேனுய்யுமாறே. (66)

சத்ததாயிருக்குநின்னைச்சார்ந்தனான்மறைகளுக்கும்
சித்தனல்விரதத்தார்க்குஞ்சோதியெட்டாதுவாழ்வோய்
கத்துதலகற்றிச்சேர்ந்தகற்பனைச்செயலைனீக்கி
யத்தனேயருளாக்ஷீசாவாதரவிலேனெனக்கே. (67)

சித்ததாயுயிர்கடோறுஞ்சீருடனாடல்செய்யு
முத்தனேசிதம்பரத்துமூதாரிலம்மைகாணச்
சுத்தமானடனஞ்செய்யுஞ்சோதியேயாதிமூர்த்தி
யத்தவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவாயே. (68)

ஆனந்தமாயென்னாளுமன்பர்கணெஞ்சினீங்காய்
ஆனந்தமாகிவானோரண்டம்வாழ்வார்க்குந்தோன்றா
மோனந்தமானநின்னைமூடனேனியானுங்கண்டே
வானந்தவாரீசேரவாக்ஷீசாயாளலென்றே. (69)

தந்தைதாய்தமருமாகித்தாரமாயுடன்பிறந்தார்
மைந்தராய்மனையாளாகிமாமனாயெவருமாகி
வந்தவெவ்வுயிருநீயேவான்பதந்தருவாயெந்தாய்
அந்தவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (70)

மைந்தன்யான்வேண்டிக்கேட்டவாறுநீயருளலுண்டேல்
சொந்தமாயடியார்வாழச்சொல்வளமனைத்துமுள்ள
வந்தமாமிடமிதாகவாதரவுடனருள்வாய்
எந்தையேயிருக்குபோற்றுமீசவச்சிறுபாக்கத்தாய். (71)

கோங்குமாவசோகுபுன்னைகொன்றைதன்னிரையின்வீதி
மாங்குயில்கிளிகளோடுவண்டுகள்கீதம்பாட
வாங்குளவேசிமார்களற்புதநடனமாட
பாங்குளவுன்றன்சேவைபாரினில்விரும்பினேனே. (72)

பாரொடுபரந்தவிண்ணும்பால்மதிரவியுமாகி
நீரொடுநெருப்புமாகிநீணிலந்தனினற்காலாய்
காரொடுமழையுமாகிக்காரணமெவையுமாகித்
தாரெனவரவஞ்சூடுந்தாணுநின்னடிகள்போற்றி. (73)

ஒன்றதாய்ப்பலவுமாகியுள்ளதாயில்லதாகி
நன்றதாய்நவையுமாகிநாடுதற்கரியதாகி
நின்றநன்னிலையினீங்காநீண்டபேரொளியுமாகி
பொன்றலில்பொருளேயுன்றன்பூத்துணையடிகள்போற்றி. (74)

நேற்றாகியின்றுமாகிநிற்பதாய்நிலையாதாகிப்
போற்றுதற்கிசையாதாகிப்போதமாயனைத்துமானாய்

காற்றினிற்கறங்குபோலக்கற்றிலேன்கலங்காவண்ணம்
ஆற்றினைத்தலைக்கணிந்தவத்தனேயருளுவாயே. (75)

நேற்றுரின்றைக்குமாளும்நீர்மையினைநேரிற்கண்டும்
சோற்றினைவாரியுண்ணல்சோர்விலாச்சுகமதென்றே
நாற்றிசைதிரிந்துவீணேநாதனுன்கழியாவண்ணம்
போற்றினேன்மலர்ப்பதங்கள்புண்ணியாவருள்செய்வாயே. (76)

போற்றுமாலயன்றன்னோடுபுத்தேளிர்கோமான்றானும்
சாற்றுனின்னடியைக்காணச்சஞ்சலத்தழுந்தினின்றார்
ஏற்றுதற்கறிவிலாவிவ்வீனனேன்வாழ்நாள்போக்கா
தேற்றுடையிறையேயெந்தாயென்றனக்கருளுவாயே. (77)

பொய்தன்னைமெய்யதாகப்போக்கினேன்வாழுநாளை
மெய்தன்னைப்பொய்யென்றெண்ணிமேவினேன்வினைக்கிடந்தே
செய்யதாமரையென்சென்னிச்சேர்த்திங்குதீக்கைசெய்தே
வையவச்சிறுபாக்கத்தாயப்பனேயருளுவாயே. (78)

என்னுடைக்குரம்பைநானென்றெண்ணியேமமதைகொள்ளா
துன்னுடையருளையென்றனுள்ளத்திலூற்றிப்பின்னுஞ்
சன்னிதியடையச்செய்துசற்புத்தியீங்கெனக்கும்
அன்னைபோலருள்செய்வாயேயாக்ஷீசாபோற்றிபோற்றி. (79)

நின்னுடையெழுத்தைந்தையுனேயமாய்ச்செபங்கள்செய்து
மன்னியுன்னடிகடம்மைமன்னனேமறவாவண்ணம்
உன்னதுதயவினாலேவுத்தமாவருளிச்செய்வாய்
மின்னுமச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவாயே. (80)

சித்தர்மாதவத்தோரேத்தச்சிற்றம்பலத்திலுற்றும்
முத்தர்வாழ்காசிவேளூர்மோக்கமிங்கருளுமாரூர்
சுத்தவேகம்பங்காழிச்சொல்லாலவாயில்குற்றா
லத்துமுற்றவனாய்நின்றானச்சிற்றபாக்கத்தானே. (81)

ஏதுநான்பிழைசெய்தாலுமெனாதனைப்பெற்றார்போலக்
கோதெலாங்குணமாக்கொண்டுகோவேயென்குருவுமானாய்
சாதுவாமடியார்கூட்டந்தன்னையானகலாவண்ணம்
நாதவச்சிறுபாக்கத்தாய்நாயினேற்கருளுவாயே. (82)

அருமருந்தினையேயன்றியண்டத்தில்வேறுண்டாமோ
திருமருந்தருளேயல்லாற்றிக்குவேறறியேனந்தோ
வொருமருந்தெனக்குவேண்டேனொப்பிலாயெனையுமாள்வாய்
பெருமையச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவானே. (83)

பிறப்பிறப்பதனைநீக்கும்பேர்மருந்துனையிங்கன்றிச்
சிறப்பிலாமருந்துதன்னைச்சிந்தையினினைக்கமாட்டேன்
வெறுப்பிலாமருந்தாமுன்றன்வீட்டுள்ளபேரானந்தம்
சிறப்பதையருளாயெந்தன்செல்வமேசிறியனேற்கே. (84)

எப்பிணிவரினும்யானிங்கெம்மருந்தெனினுமுண்ணேன்
ஒப்பிலாயுனையேயன்றியோர்துணையெதுவுமில்லேன்
தப்பிதமெவைசெய்தாலுந்தாயெனப்பொறுத்தாள்வாயே
வப்பவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (85)

மருந்ததையறியேன்வேறோர்வல்லபமிலனுன்னைப்
பொருந்தவோர்வழியிங்கில்லேன்புண்ணியமுடையனல்லேன்
அருந்தவமெதுவுஞ்செய்யேனப்பனேயருளலெற்குன்
பெரியதோர்கடமைகண்டாய்பேசுதற்கரியவெந்தாய். (86)

வல்லபந்தருவதுன்றன்பதமெனவழுத்தகில்லேன்
தொல்லையாம்பிறவிவேலைத்தோய்ந்திடாவண்ணநீயாளச்
சொல்லவுமறிகிலேனைச்சோதியேயறியச்செய்வாய்
நல்லவச்சிறுபாக்கத்திலாக்ஷிகொண்டருளுவோனே. (87)

உடுக்கவுத்தரியமின்றியுண்ணவாகாரமின்றி
தடுக்கவுமனிதரின்றித்தங்கமாம்பொருளுமில்லேன்
கொடுக்கனின்னருளிருக்கக்கோவேனுன்வேண்டலெல்லாம்
தடுப்பதிங்கெவரச்சிற்றபாக்கத்தில்வாழுவோனே. (88)

கேட்டுநான்பிழைப்பதென்றால்கேட்கவுமறிந்திலேன்யான்
கோட்டேனக்குருளைக்கன்றுகோதிலாவருளையீந்தாய்
ஆட்டுவாயுலகுதன்னையப்பனின்னினைவினாலே
மாட்டின்மீதேறுமாக்ஷியீசவெற்கருளுவாயே. (89)

வறுமையையுடையனேனும்வான்கல்வியில்லனேனும்
சிறுமையிலிருந்தேனேனுஞ்சீரொன்றுமில்லனேனும்
பொறுமையுமிலனுனேனும்புண்ணியாவுனதடிக்கே
வொருமையாய்வணங்கிநிற்கவுத்தமாவருளுவாயே. (90)

கன்மமிக்குளனேனுங்காரணமறியேனேனும்
வன்மனமுடையேனேனும்வஞ்சகமாறுதேனும்
இன்னுளத்தடியர்தம்மிலின்பமாய்நிறைந்தவொன்றே
என்றனக்கருளலுன்றன்பேரருட்கடனேகண்டாய். (91)

சுந்தரமூர்த்திக்கன்றுதூதனுயிசைந்ததன்றி
யந்தனற்பரவைக்காகவப்பனேமுதிகுன்றத்திட்

டெந்தையாரூர்குளத்திலிட்டபொனெடுப்பாயென்று
யிந்தனுளடியனேற்குமேதேனுமீந்திடாயே. (92)

திருஞானசம்பந்தற்குத்தீம்பாலையீந்துமேலாம்
அரும்பெருமணத்தெல்லோர்க்குமாறில்வானீந்தவண்ணம்
ஒருஞானமில்லேனேனுமுனதருட்டன்மையாலே
யருளிடாயெதனையேனுமாகூஷீசாயேழையேற்கே. (93)

திருநாவுக்கரசருக்குத்தீமைசெய்சமணர்தன்மை
யொருவாறுமோங்காவண்ணமுள்ளத்திற்கொண்டேசைவம்
பெருகியேவளரவைத்தாய்பிச்சனேன்றனக்கேதேனும்
யருளாயச்சிற்றபாக்கத்தாட்சிகொண்டருளுவோனே. (94)

வாதவூராளிசேர்ந்தவன்பன்பாண்டியன்றனக்குக்
கோதிலாக்குதிரைகொண்டாய்கோதுளநரியாய்ச்செய்தாய்
ஆதியேயடியனேற்குமாதரவுடனேதேனும்
தாதையேயருளிடாயேதையலையிடத்துவைத்தாய். (95)

அறுபத்துமூன்றுநாயன்மாரடிக்கடியனுக
வுறுபுத்திகொண்டேனென்னையொப்பிலாப்பிரானேயின்று
மறுபுத்திகொள்ளாவண்ணம்மாறிலாவருளையீந்தச்
சிறுபாக்கத்துள்ளாய்காக்கச்சீரியாகடனுனக்கே. (96)

உன்னுடையுளம்வாழன்பருன்னுவவனைத்திேைடு
னன்னடையருளுந்தந்துநாடோறும்வாழ்வித்தாண்டா
யன்னடையெனக்குனல்கியாண்டருளரசேயீன்ற
வன்னையேவனேயின்மிக்கோயாகூஷீசவெம்பிரானே. (97)

அன்புளவடியார்தம்மையாண்டநற்குணமேபோற்றி
அன்புளவடியார்தங்களம்புயச்சரணம்போற்றி
அன்புளவடியார்வாழுமாலயஞ்சரணம்போற்றி
அன்புளவடியரானேரன்புமென்னுளும்போற்றி. (98)

அச்சிற்றபாக்கந்தள்ளிலன்புடனிறையேயென்றாய்
பச்சிளங்கிள்ளைதானேர்பாகமாய்வளரநின்றாய்
மெச்சுனல்லுளமில்லேனைமேவுனின்னருட்டிறத்தால்
இச்சைபோற்கவியியற்றயெந்தனுக்கருளையீந்தாய். (99)

வாழியவ்வருளுமுன்றன்வண்டமர்கழல்களோடு
வாழிமாதிளங்கிளித்தாய்வாழுந்தன்மக்களோடு
வாழினல்லடியர்தாமும்வாழிபல்வளமும்வாழி
வாழிநல்லறங்கள்யாவும்யானுமன்புடனேவாழி (100)

# ஸ்ரீ இளங்கிளியம்மையார் அருள்குறிமாலை

## ஆசிரிய விருத்தம்

அருங்கலைகள்மிக்குணர்ந்துவன்புடனேபாடுகின்றவாற்றலில்லேன்
கருங்கல்லையொத்திருக்கும்நெஞ்சதனைக்கன்பார்த்துநீராய்ச்செய்தே
பெருந்திருவானின்னருளைநீங்காதபேறுடையோர்சங்கஞ்சேர்ப்பாய்
மருவினியமலர்ப்பாதமணஞ்சிறக்கச்சிறுபாக்கம்வாழுந்தாயே. (1)

தாயேநின்றிருவடியாரெக்காலுந்தவஞ்செய்துமயக்ககற்றிப்
பேயேபோலாடுமெனப்பித்தொழிந்துதிருவடிக்கீழ்ப்புகுதலானுர்
எனேனுனென்னுளுந்தீவினையைப்பெருக்கியேதிகைத்துநின்றேன்
சேயேபோற்பாவித்தென்சிந்தையைநின்றிருவடிக்காய்த்திருப்பிடாயே. (2)

திரும்பியேபார்க்கினிந்தவுலகெங்குமுன்னையன்றியாதுங்காணர்
விரும்புந்தான்முதலானதத்துவமாயுயிராகியுணர்வுமாகித்
தரும்போகமனைத்திற்குந்தாயகமாய்த்தனித்துநிற்கும்பெற்றிகண்டார்
கரும்புருவச்சிலைநுதலாயிளங்கிளியுன்கருணைகொண்டனல்லோரானுர். (3)

ஆனாலுநின்னடிமையாவதன்றிவேறொருவர்க்காகமாட்டேன்
நானாபேதங்களுளமாயையுளனுடாதநாட்டம்வைப்பாய்
தேனூருங்கொன்றைத்தார்சடையானஞ்சிவபெருமானிடப்பாகத்தாய்
யானனயென்மனக்கோதகற்றியருளிளங்கிளியாயமருந்தேவே. (4)

வேறு

தேவேநீசிற்றுயிர்களனைத்துமாட்டித்திருநடனஞ்செய்கின்றதிறத்தையெல்லாம்
நாவேறுசெல்விமகிழ்நாயகனுஞரணனுந்தேவர்களுஞடிக்காணுச்
சேவேறுஞ்சிவபெருமானிடப்பாகமலங்கரிக்குஞ்சீருடையாயறிவனேனன்
ஆவானவென்னகத்தினழுக்ககற்றியாண்டுகொள்வாயிளங்கிளியாயமருங்கோவே

கோவேயென்கொடியகுணமனைத்துனீக்கிக்குணக்கடலாய்நின்றவொன்றே
குருவாய்வந்த, வாழ்வேவென்மலப்பிணிநோயனைத்தையுந்தீர்மாமருந்தையளிக்
கின்றமணியேயென்னைச், சாவேதும் பிறப்புடனில்லாதருளிச்சத்தானின்பத
நிழற்கீழ்ச்சதுராய்வாழத், தேவேயுன்னருளெனக்குந்தந்தருளாயாக்ஷீசரிளங்
கிளியேதெய்வத்தாயே. (6)

தாயாகித்தந்தையுமாய்த்தமருமாகித்தாரமுமாய்ச்சுற்றமுமாய்மகவுமாகித்
தேயாதவைம்புலனுமையம்பூதமறிகரணவறிவாகித்தெளிவுமாகி
நீயாகியானுகிநின்றனின்னைநினைப்புமறப்பெனுந்திரையாலறியாநாயேற்
கோயாதவல்லறனையகற்றியாள்வாயுத்தமியேயிளங்கிளியேயுலகப்பேறே. (7)

உலகவிவகாரமெலாங்கடந்துநின்றவுனதுபதிதனிமுதலையுணர்ந்துனடி
மலைமலையாம்வினைவிளைமும்மலத்திேனடுமெயக்கமெனும்பசுபாசமகற்றிவாழத்
தலைபலவாஞ்சமயமெலாங்கடந்தமோனத்தற்பரத்தைநீங்காமற்சார்ந்துவாழும்
நலம்பெறுனின்னடியரருணடுவிருத்திநாயேனையிள்ங்கிளியேயாளுவாயே. (8)

ஆளுவாய்நின்னடியாரடைந்தவின்பமாகடலையானடையவிரும்பிநின்றேன் [ற்
தாளுவனேவேள்கணைக்குந் தலையிலெழுதியவினைக்கும்நிலைகலங்கச்செயுங்கூற்றி
கும், நாளுமேயெனைத்தொடருமிருளைநீக்கிநற்றவஞ்செய்தீடேறனிலையினேட்டிக்
காளையின்மீதேறுமவரிடப்பாகங்கலந்தகண்ணேயிளங்கிளியேகருத்தாயம்மா. (9)

அம்மாநானுடலெடுத்தவன்றுமுதலின்றுவரையறிவில்லாமூடனாகிச்
செம்மையிதென்றோராமற்றிரிந்துவருந்தீயனுக்குமறுமையும்வந்தெய்திடாமற்
சும்மாதானிருவென்றேசூக்ஷமத்தைச்சொல்லாமற்சொலிமௌனசுகத்தைத்தந்தே
பெம்மானுமாக்ஷீசரிடப்பாகங்கலந்தொளிருமிளங்கிளியேயருளுவாயே. (10)

அருளாதென்மனம்போனவழியெல்லாம்விடுத்தாலஞ்சேலென்பாராருண்டிங்கே
மருளாமன்மாயையெல்லாம்வழிவிட்டுநிற்குமொருமார்க்கமதையன்பர்காண
விருளாகியொளியாகியிரண்டினடுவாகிநின்றயெந்தையெழுந்தருளிவந்தே
தெருளாகும்பழையவடியார்க்கருள்செய்தாற்போலிளங்கிளியேயெனையீடேற்றே

ஈடேறச்செய்யாதுவிட்டுவிட்டாயானாலிவ்வுலகுமிகவேசிடாதோ
பாடேறிப்பலனடையுஞ்சமுசாரிபோற்பத்திசித்திமுத்திபதியச்செய்தே
கோடேறுங்கொடியதுபோலியானலையாதுன்கழற்கீழிருக்கச்செய்வாய்
ஏடேறுமெழுத்ததுபோலுடலுயிர்க்குமுயிராயென்னுளுமமரிளங்கிள்ளையே. (12)

என்னாளுமல்லலினாலிடருற்றும்புலன்கடம்மாலலைப்பதுவுமுண்டேயேங்கிப்
பன்னாளுமுலகத்தோடோடியாடிப்பட்டபாடுகள்போதும்போதும்போதும்
நன்னாளாச்செய்வமினிநீயெதற்குமஞ்சாதேயஞ்சாதேமகனேயென்று
வின்னாளாங்கலியுகத்திற்றிடச்சாக்ஷிதந்தருள்வாயிளங்கிளியேயென்றன்வாழ்வே

வாழ்வேயென்மதிமயங்காதினியேனும்மாயையதுவாராமன்மாய்ந்துபோக •
தாழ்வானவுலகநடைபொய்மிகப்பொய்யென்றுதள்ளவன்னையென்றாமதாமோ
ஊழ்வலியாலிவ்வுடலமெடுத்தெடுத்துமாய்ந்திழிந்துநோய்களினனையலின்றி
யேழ்ஜனனப்பவக்கடலைக்கடக்கவெனக்கருள்வாயேயிளங்கிளியேயின்பமுடனே

இன்பமுறுநின்னடியார்கூட்டமதிலென்னாளுந்தவஞ்செய்யவுன்னிநின்றுந் [ன்
துன்புறுமிச்சகவாழ்வைமெய்யென்றுஞ்சுக மென்றும்நினைத்துமிகயேழையானே
வன்புறுமிச்சம்சாரவாழ்க்கைதனைக்கைவிட்டுன் னருணிலையைநோக்காநின்றேன்
அன்புடனேயடியேனையாதரித்திங்கருள்செய்யாயிளங்கிளியேயென்றன்கண்ணே

கண்ணேயென்னிருகண்ணுண்மணியாகிக்காரிய காரணங்களெல்லாங்கடந்தமோன
விண்ணேயவ்விண்ணுக்குளொளியானவேதகமேபோதகமேவிமலவாழ்வே

பண்ணேயப்பண்ணிசையேபான்மைமிகும்பாமாலேயருளுமன்பர்பக்ஷம்நீங்கா
வெண்ணேயவ்வெண்ணுக்குளெழுத்தானவேகபரிபூரணமாமிளங்கிளியே. ()

பூரணமாயானந்தச்சித்தாகிச்சத்தாகிப்போக்குவரவில்லாதாகிக்
காரணகாரியங்களெலாங்கருதாதகருத்தினர்தமுளக்கருத்தாய்மேவிநின்ருய்
தோரணமாமாயையெலாந்திரையதாகிச்சொரூபானந்தச்சுடரைமறைத்துநின்றே
மாரணமும்பிறப்புமாயெனைத்துன்பஞ்செய்யுமிதையிளங்கிளியேமாற்றுவாயே.

வேறு

மாற்றுவிப் பதஞ்சுபுலவேடர் தொழிலாகவலித்துவலித் தெனேயிழுத்து வசஞ்செய்துன்மார்க்க, நாற்றமிகு மங்கையர்கள்மாயவலேக்குள்ளேநாயடியேன் றடையுண்டானன்னெறியுய்வேனே, காற்றதனிலாடுகின்றபட்டமதுபோலக் கயறுகொண்டுசூத்திரமாயெனேயாட்டவல்லோ, னேற்றமதிலேறுகின்றவாக்ஷீ சர்பாகமிவ்வுலகமறியவமர்ந்திருக்குமிளங்கிளியே. (18)

இவ்வுலகமுழுவது நீயரசுசெய்வ தெங்ஙனென்று யிலவரவர்தம்வினைக் கொண்டிங்கெனினும், எவ்வுயிர்க்குமுயிராகியுளும்புறம்பாயெங்குமிணையில்லா வாற்றலுடனெத்தொழிலுனடத்த, நவ்வுமுதலாமஞ்சுங்கர்த்தாக்களாக்கிநாதாந்த சொரூபமதாய்நடனஞ்செய்கின்று, யிவ்வடியேன் றுயரகலவருள்செயலென் ணளோவென்ணளோவென்றுசிந்தையேங்குதிளங்கிளியே. (19)

சிந்தைவிரிவாலுமைந்துபுலன் கடம்மாலுஞ்சிதைவுற்றசிறியேனென்றுந் தோன்ருமல், நைந்துமனேமுதலானமூவாசைதன்னல்நானென்றுமெனதென்றும் நாயடியேன்கெட்டேன், எந்தாயுன்னடியவர்களென்றுமுனேயேத்தியிடரணுகா வுன்றனருட்பதநிழலின்படைந்தார்,முந்தியான்செய்பிழைகடமைமுற்றுமறந்தென் னும்மூடமதிபோயுய்யும்வகையருள்செய்வாயே. (20)

உய்வழியையறிந்துநிற்குமுத்தமர்களெல்லாமோதிவேதாகமநூலேயுணர்ந்தி ணர்ந்தேயிந்தப், பொய்யானவுலகநடைதம்மையெலாநீத்துப்பூரணமானின்னடி யைப்புகழ்ந்தேமெய்யானர், செய்யுனலசெய்கைதனேயறியாதசிறியேன்செப்பமு டியாதபொல்லாங்கெல்லாஞ்செய்தனனல்,கையதனேநழுவவிடல்நின்கருணேக்கழ கோகடையேனேயிளங்கிளியேகாப்பதுன்றன் கடனே. (21)

உனதுகடன்காப்பதென வுறுதிகொண்டுன் னடியருணர்ந்துதுணர்ந்துநின் னெருமைப்பதத்தின்வந்தடைந்தார், மனமதுவென்வசமாகவாராதைம்புலன்கள் வழிச்சென்றேயெனேத்துக்கவாரிதியிலாழ்த்தக், கனதுக்கந்தெரியாதுன்கழல்நி னேயவேண்டுங்கரியகண்டன்றனக்கரியகாதலியேமின்னே, எனதுசிந்தைக்கறிவ ரிதாயெங்குநிறைசித்தேயேழைக்குமிரங்கியருளிளங்கிளியென்ருயே. (22)

எந்தாயுன் சீருளேயிரவுபகலாக யெண்ணியெண்ணியென்பெல்லானெக் குவிடலாகிப், பந்தமெலாமகற்றியுன்றன்பதநிழலிற்றங்கப்பாக்கியமென்செய்தா

ரோபழவடியரெல்லாம், சிந்தைதுடித்தடியேன்செய்வகையறியாதிங்கேதிகைக்கின்றேன்திரும்பியென்றனேழைமுகம்பார்த்தே, யிந்தாவிந்தாவென்றுனருட்பதமென்முடிமேலேற்றுவதென்றோவென்றேயேங்கினனென்றாயே. (23)

எங்கினனிவ்வுலகதனைமெய்யாமொன்றென்று மிவ்வுடலமியானென்றுமெண்ணியிதுகாறும், பாங்கில்லாமடவார்தம்பாற்சென்றிங்கவர்க்காய்பாடுபட்டேமிகவருந்தினாள்கழித்தேனந்தோ, தீங்கொன்றும்வாராமற்றிருவடியாரெல்லாந்திறம்பாவுன்சீரருளைச்சேர்ந்துநின்றார்யானும், ஈங்கென்றுமுனதுதிருவடிநிழல்பெறவேயெண்ணியவெண்ணந்தனைநீமுடிப்பாய்நல்வெளியே. (24)

வெளியானநீயனைத்தினுளும் புறம்பாய்நின்று விளையாடலுற்றவுன்னையறியவல்லார்யாரே, தெளியாதேயிரங்கியனின்றிருவடியார்பின்னேதெளிந்துன்றனருளானதிருவமுதங்கொண்டார், ஒளியாதேவுலகிலுளபற்றுமுழுவதையுமொதுக்கினின்றவுத்தமர்க்கிங்குழைத்ததெனறுமில்லை, எளியேனுனினனருள்பெற்றின்புறவேண்டினனேயென்றாயேயிளங்கிளியேயிரங்கியருள்வாயே. (25)

இரங்கியெனறு மிடைவிடாதுண் ணெக்குருகி யுருகியிரவுபகலுனனாதேயெனறுமொருபொழுதாய், உறங்கியேனாள்கழிக்காதேயுனறனருட்பதத்தையுளக்கமலப்பீடமிசையுறச்செய்தாரிங்கே, குரங்கெனவேமனந்திரிய குணமொன்றுமினறிக்கூத்தாடிக்கூத்தாடி வாழ்நாளைக்கழித்தேன, தரமல்லேனெதற்குமிந்தவேழைக்குமுனறனறரமானதிருவளிப்பாய்தெய்வவிளங்கிளியே. (26)

திருநோக்கை யெதிர்நோக்குந்திறமுடையஞான தீரரெல்லாஞ்சீலமொடுதவவிரதம்புரிந்தே, கருநோக்கைமறந்துனின்று கருத்தொருமித் திருந்தேகருதரியநின்னதருளடிகலந்துவாழ்வார், உருநோக்கியுயிர்நோக்கியுரைபொருளைநோக்கி யுலகதனில் நாள்கழித்து ஆசலாடாநின்றேன், மருள்மனத்தேனுன்னுடையமலரடியைப்பணிந்தேன்மலநீக்கியிளங்கிளியேயெனையாளலென்றோ. ()

என்றோநீயன்றுமுதலேழ்ஜனனக்கடலி லேழைநாயெனத்தனையோதுன்புற்றேனந்தோ, அன்றோவக்காலமெலா மறிவிலியேன்பட்டதுயரமெலாநீக்கினின்றாய்நீள்கருணைநிதினீ, நன்றோவெவ்வுயிரினையு மீன்றளித்தேமகிழுமெந்தாயேனைவியலிங்குன்றனருட்கே, யின்றோடேயென்மனத்தினசுத்தமெலாம்போக்கியென்னாளுமிளங்கிளியேயிரங்கியருள்வாயே. (28)

இரங்கிடுவாயீன்றதொருமக்களுக்குனற்றா யிரங்குதல்போலென்றெனக்குமின்னாளன்புடனே, கரங்கடமைச்சிரங்குவித்துக்காதலிப்பார்தமக்குக்காதலித்தவண்ணமெலாங்கோலமதுகொண்டு, தரங்களொப்பத்தயவாலுன்னருளொளியையீந்தே தானாதன்மயமாய்ச்செய்தருளுமருளே, சிரந்தன்னிலாறடைத்தசிவபெருமானிடத்தேசிறந்தொளிருஞ்சிங்காரவிளங்கிளியேதாயே. (29)

தாயான தண்ணருளைநிறையவைத்துத்தாயேதமியேனிப்பிறப்பிறப்பிலாழாதே யருள்வாய், ஓயாமலுன்னருளேயுறுந்துணையென்றுன்னியுத்தமர்களெல்லாநின் றிருவடியிற்கலந்தார், பேயானகுணமுடையபேதையடியேனேபிதற்றுகின்றே னின்னதருட்டிறமறியாவண்ணம், வாயாரமனமாரநின்னருளைப்பாடவாராமுட னிளங்கிளியேவரந்தனையீவாயே. (30)

வேறு

என்னேயான்செய்யுமாறிங்கின்னதென்றறியாவேழை
முன்னேயென்செய்தபோதுமூர்க்கனைமுனிந்திடாதே
பின்னேயெப்போதியாதும்பேசிடும்பிழைவராதாள்
அன்னையேசுகாம்பாவுன்றனாரடிமலர்கள்போற்றி (31)

உன்னையேதொழுதலன்றியாரையுமுளத்திலுன்னேன்
சன்னிதிபெருகிவாழத்தகவுடையடியார்கூட்டம்
பின்னமெப்பொழுதுமின்றிப்பேறுடனெருங்கச்செய்வாய்
அன்னையேசுகாம்பாளேசீராரடிக்கமலம்போற்றி. (32)

எத்தனைபிறப்போமுன்னமேழ்வகையாந்தோற்றத்துள்ளே
யத்தனையறிவைநீயுமம்மனைறியப்போமோ
பித்தனென்றுலகோரென்னைப்பேசுதலெதற்கோகாணேன்
சுத்தமாய்ச்சுகாம்பாவன்பர்சூழுனின்னடிகள்போற்றி. (33)

போதினைவீண்போக்கினுளும்பொன்னடிவணங்கேனேனும்
மாதரார்வலையிற்சிக்காவான்பதமருளியாண்டாய்
எதுனுன்பதில்கைம்மாறிங்கென்றுயேகண்டிடேனுல்
சோதியேசுகாம்பாவன்பர்சூழுனின்னடிகள்போற்றி. (34)

வந்தவாறிதுவேயென்றுவாழ்ந்திதுவரையிலோரேன்
பந்தமிங்ககலாநிற்கும்பையலாயிருந்தேனேனும்
மந்தமாமலத்தைநீக்கிமன்னுயிர்க்கரசேயாள்வாய்
சுந்தரிசுகாம்பாவன்பர்சூழுனின்னடிகள்போற்றி. (35)

உலகவர்பலருமேசாதுன்னருட்பெறவேவேண்டிச்
சலனமதிலாதென்சித்தம்சன்னிதிபொருந்திவாழப்
புலன்களைச்சுத்தமாக்கிப்பொன்னடிநினைந்துவாழ
நலந்தராய்சுகாம்பாவுன்றனல்லிணையடிகள்போற்றி (36)

கெட்டனுளவைகள்போதங்கேடிலாவருட்பேறெய்த
விட்டனுளிதுதானென்றேவேண்டிநீயருள்செய்வாயே
மட்டுவார்குழலினூடேமாப்பெருங்கருணைக்கண்கள்
இட்டமாயுலவியாடுமீறில்சுகாம்பாபோற்றி. (37)

எத்தனையுகங்கடோறுமீங்கியான்றுயரடைந்தும்
அத்தனைதுயரும்போக்கியாண்டருளளித்தாய்போற்றி
சித்தம்வைத்தெம்மானுனசீர்பெருங்கருணையாளன்
அத்தனையடைசுகாம்பாநின்மலரடிகள்போற்றி (38)

பித்தனென்றுலகோரேசும்பெம்மானைநீங்கானின்று
மெய்த்தவம்புரிவோர்தாங்கள்மேவியவிடரைப்போக்கச்
சத்திவேல்பிடித்தோனானசண்முகன்றனையீன்றாளே
உத்தமச்சுகாம்பிகையேவூதியமருள்செய்வாயே. (39)

மத்தமுமதியஞ்சூடிமாமறையறியாச்சோதி
சித்தர்கள்சிட்டர்வாழுந்தில்லையினரசைநோக்காப்
பொய்த்தவம்புரிவோனானபொய்யனேனெனையுமாண்ட
சத்தியேசுகாம்பாவுன்றன்றாளிணையவைகள்போற்றி. (40)

நற்றவம்புரிந்தோரெல்லாம்நற்பதமடையவேண்டி
சொற்பதங்கடந்தோன்றூயசோதிநல்லடியைச்சார்ந்தார்
கற்பனையெதுவுமில்லாக்கற்றவர்க்கினியனல்லேன்
அற்புதச்சுகமேயுன்றனன்பனேற்கருள்செய்வாயே. (41)

யாதுமிங்கறியேனேனும்யானென்னைப்பாரேனேனும்
மாதுடன்மயங்கிநின்றேன்மாயையின்வலைப்படாமற்
பாதுகாத்தருளிச்செய்வாய்பர்வதமளித்தனல்ல
வோதருஞ்சுகாம்பிகையேயுன்னடிமலர்கள்போற்றி. (42)

அடியவருறையனல்லவாலயமதுவுண்டாகப்
படியினிலெவர்க்குமேலாம்பாக்கியமருளிச்செய்வாய்
கொடிபடாருளானந்தக்கூட்டமென்றுலகோர்மெச்சச்
சுடரொளிச்சுகாம்பாவன்பர்சூழுநின்னடிகள்போற்றி. (43)

அல்லல்கடீர்ந்தவுன்றனன்பர்தங்கூட்டஞ்சார்ந்து
தொல்லையாம்பிறவிவேலைத்தோன்றாமற்செய்யவேண்டிச்
சொல்முடிவருளானந்தச்சொல்லருஞ்சபையில்வாழ
வல்குழற்சுகாம்பாவுன்றன்னன்பனேற்கருள்செய்வாயே. (44)

கற்புள்ளமாதர்தங்கள்கண்போன்றநாதர்நாடும்
அற்புதமெனவேயுன்றனன்பராங்குழாங்கள்வாழச்
சிற்பதவருளானந்தச்சீருறுசபையில்வாழ
நற்பதச்சுகாம்பிகையேநாயினேற்கருள்செய்வாயே. (45)

வேலனையளித்தாய்பின்னர்வேழமாமுகத்தோனான
பாலனையளித்தாய்முன்னர்பண்பதையறிந்துபார்க்கின்

ஆலமர்கடவுடன்னுலண்டங்கள்யாவுமீன்ற
கோலமேசுகாம்பாவுன்றன்கோலமாரடிகள்போற்றி. (46)

தத்துவமறியேன்வேறுசாத்திரமுணரவல்லேன்
புத்திசற்றிலனுனேனும்பொன்னடிபொருந்தனல்ல
அத்துவிதந்தேறேனேனுமாண்டருள்கருணையால்வ
சித்தனீசுகாம்பாவுன்றன்சீரடிமலர்கள்போற்றி. (47)

மழையதுபொழிவதின்றேல்மக்களாமுயிரென்செய்யும்
குழையுனல்லுளத்திலன்புகூர்ந்துமேநிறைவாய்ப்பெய்து
பிழைவராதருளிச்செய்வாய்பெற்றவெம்பிராட்டிபோற்றி
அழகுடைச்சுகாம்பாவாசமாரடியிணைகள்போற்றி. (48)

என்னுடையனுவிழுக்கிங்கென்றுமேவராமலாள
லுன்னருட்செயலேயன்றியோர்செயலெனதென்றில்லை
மின்னிடைத்துவர்வாய்ச்செங்கண்மின்கொடியெனவிளங்கும்
அன்னையேசுகாம்பாவாசமாரடியிணைகள்போற்றி. (49)

அல்குலாமரவுதீண்டியாவியையகற்றுனஞ்சஞ்
சொல்வகையனைத்தினுலும்சோர்வினையடைந்துநிற்பேன்
நல்வகையருளியென்றும்நல்லதோர்சமாதிவைப்பாய்
அல்குழலுடைமீனுக்ஷியம்மனின்கழல்கள்போற்றி. (50)

பங்கமேவிளைத்துநிற்கும்பாவைமாரரவுதீண்டிக்
கொங்கையைப்பலாவென்றெண்ணிக்கோதுளேனுகிநிற்பேன்
துங்கனின்னருள்கொண்டென்னைத்தூயனுய்த்திரித்தருள்வாய்
அங்கயல்விழியாயுன்மாவாரடியிணைகள்போற்றி. (51)

சங்கைகணினையாமாதர்தம்மிடத்தரவுதீண்டிப்
புங்கஞ்செய்கொங்கைதன்மேற்பார்வையான்மயக்கமீறி
அங்கமுமனமுனையாதாண்டெனக்கருளினிற்கும்
அங்கயல்விழியாயுன்சீராரடியிணைகள்போற்றி. (52)

நங்கையர்தம்வாழ்வைநம்பிநாடன்னைவீணேபோக்கிச்
சங்கையதிலனுயல்குற்சார்ந்திங்குவாழ்வேன்றன்னை
இங்குவாவடியனேயென்றென்னையிங்கருள்கொடாள்வாய்
அங்கயல்விழியாயுன்பூவாரடியிணைகள்போற்றி. (53)

எங்கெங்குமோடியாடியீரமில்மனத்தராகிப்
பங்கமேநினைந்திடாதபார்வைமாரரவுதீண்டு
மிங்கிந்தவாழ்வுதன்னைநம்பியேமாறுதாள்வாய்
அங்கயல்விழியாயாயுன்மாவிரடியிணைகள்போற்றி. (54)

பங்கமொன்றிலாமல்வாழும்பழவடியவர்கள்கூட்டஞ்
சங்கையதிலராய்மாதர்சார்பின்றிவாழ்தலேபோற்
றிங்களைமுடிக்கணிந்ததேவனைச்சேர்ந்துநின்ற
நங்கையேயருளெனக்கும்நாளுமுன்னடிகள்போற்றி. (55)

அங்குமிங்கெனவேபாழிலாழ்ந்திடாவடியர்கூட்டம்
சங்கையதிலாமல்வாழச்சார்ந்தனரடிநீங்காமல்
இங்குவாழ்வினைமெய்யென்றேயீனனேனழியாதாள்வாய்
அங்கயல்விழியாயுன்சீராரடியிணைகள்போற்றி. (56)

தங்கவேறிடமில்லாமற்சாலவுமடியார்கூட்டம்
பங்கம்வாராமற்காத்துப்பான்மையோடருளீன்றாற்போல்
சங்கைகளெனையென்னாளுஞ்சாராமலாண்டுகொள்வாய்
அங்கயல்விழியாயுன்மாவாரடியிணைகள்போற்றி. (57)

தங்கமாம்பணிவேறாகாத்தன்மைபோற்றரணிசீவன்
அங்கமொன்றெனவேதோன்றவம்பரம்பொருந்திநிற்கும்
இங்கெனவெவருங்கூறயெவ்வுயிர்களுந்தானாகும்
அங்கயல்விழியாயுன்மாவாரடியிணைகள்போற்றி. (58)

பொங்குமாலயனுந்தேவபூபதிமுதலானோர்கள்
எங்குமெப்பொழுதும்போற்றியேத்தியுமடையமாட்டார்
செங்கையின்மழுமானேந்திச்சேவேறிநிற்குஞ்செல்வ
ரங்கநீங்காமீனாக்ஷியம்மவுன்கழல்கள்போற்றி. (59)

முத்தனைமுதலாய்நின்றமுதல்வனையனைத்தும்வல்ல
சித்தர்கள்தேவரானோர்தேடியுமறியமாட்டார்
கத்தனைக்கரியுரித்தகள்வனையகலாதேவாழ்
சத்தியேசுகாம்பாவன்பர்சாருநின்சரண்கள்போற்றி. (60)

நின்னுடையவாலயத்துணீங்காமலேவல்செய்வோர்
சொன்னசொற்கடவாதென்றுஞ்சோர்விலாவடியனாக்கி
நன்னடையுலகோர்மெச்சநாட்டந்தந்தாண்டுகொள்வாய்
அன்னையேசுகாம்பாவுன்றனங்கழன்மலர்கள்போற்றி. (61

உந்தன்மெய்யன்பர்வாழவோர்சபையருளானந்தம்
சொந்தமாம்படியென்னாளுஞ்சூழ்சுகமுலகோர்மெச்ச
வெந்தையாக்ஷேசர்பாகமென்னாளும்நீங்காதேவாழ்
சுந்தரிசுகாம்பாவுன்றன்றூய்மலரடிகள்போற்றி (62)

கள்ளந்தானேதுமில்லாக்காரெனவிழிநீரார
யெள்ளளவெனினுநீங்காதென்றுமிங்கருள்வாயென்றும்

வெள்ளம்வாழ்வேணியானேயென்னவேவடியரேத்தும்
வள்ளறன்சுகாம்பாவுன்றன்வாரிசவடிகள்போற்றி. (63)

நேற்றுள்ளாரின்றுபோனநீர்மையைநினைந்திலாது
சோற்றதையடைத்துத்தூங்கிச்சூழ்ந்திடுமயக்கமாழ்ந்து
கூற்றின்வாய்வீழாவண்ணங்கோதினையகற்றியாள்வாய்
பாற்றிருநீற்றன்பால்வாழ்பாவைநின்னடிகள்போற்றி. (64)

காப்பதுமுன்னையன்றிக்கர்த்தர்வேறிலாமையாலே
மூப்பதிங்கிலாததாகுமுடிவிலாச்செல்வந்தன்னை
யாப்புபோனிலைபேராமலாளுகைகுறைவிலாதீ
கூப்பினேன்கரஞ்சுகாம்பாகூறருணினதடிக்கே. (65)

என்னையிங்கிதுவாமென்றேயேழையாலறியப்போமோ
பின்னமொன்றிலாமல்வாழப்பேரருள்புரிவாய்போற்றி
கன்னன்முக்கனிக்குமிக்காய்கார்நிகர்கருணையுள்ளாய்
அன்னையேசுகாம்பாவன்பராருநின்னடிகள்போற்றி. (66)

ஒன்றையுமறியேனேனுமுள்ளதுமுரையேனேனுங்
கன்றுபோலாவைத்தேடுங்கருத்ததுமில்லேனேனுஞ்
சென்றுநல்லடியார்பாதஞ்சேவைகள்செய்யேனேனும்
என்றுமேசுகாம்பாவிந்தவேழையேற்கருள்செய்வாயே. (67)

துப்பிதழ்மடந்தைமார்கள்துன்பிடும்வலைப்படாம
லெப்படியெனினுமுன்னையேத்தவிங்கிடர்தீர்த்தாண்டு
தப்பிதமியற்றுபோதுந்தாயெனப்பொறுத்தருள்வாய்
ஒப்பனையிலாச்சுகாம்பாவுன்னடிமலர்கள்போற்றி. (68)

மனமெனுஞ்சுழலினாலேமாறுபுன்புலனாஞ்சேற்றிற்
சினமெனுங்கொடிசுற்றுற்றுச்சித்தமும்பலவாறாகி
யெனதுநானெனுமம்மூலமாயையாலிளைத்திடாத
தனமெனக்கருளிச்செய்வாய்தாணுவேசுகாம்பிகையே. (69)

என்னதுபுலன்களுக்கேயானிரையெனவிங்கெண்ணி
தன்னதுசுயமாய்நெஞ்சஞ்சாக்ஷிமேலிலாதுபோலப்
பண்ணியேயென்னையென்னாளும்பாரினிற்பிறப்பிடாம
லன்னையேசுகாம்பாவிந்தவற்பனுக்கருளுவாயே. (70)

வான்முதற்பூதமாகிவாய்ந்திடுவுயிரெலாமாய்த்
தான்முதற்கடவுளாகித்தன்னுள்ளேயாவுமாகிக்
கோன்முதற்கொள்கையாகிக்கூர்ந்தநல்லன்புமாகித்
தோன்றிடுசுகாம்பாவுன்றன்றூய்மெல்லடிகள்போற்றி. (71)

என்னையிங்கறியாவண்ணமென்மனமெனைச்செய்கோலந்
தன்னையுமறியானுகித்தப்புமிக்குடையனுகி
யுன்னையேவணங்கியுய்யுமுண்மையையுணராமூட
னன்னையேசுகாம்பாவெற்குமன்புடனருள்செய்வாயே. (72)

கிளியென்னக்கொஞ்சிப்பேசுங்கீழ்வினையுடையமாதர்
தளிரென்னுமேனிசார்ந்துதயங்கியேனைந்திடாமற்
றெளிந்திடவுனதுபாதத்தீக்கையையருளினுய்க்கிங்
களிகிலேன்சுகாம்பாவுன்றனரடிக்கமலம்போற்றி. (73)

நற்றவமுடையோர்வானோர்நன்மலரிடக்கைவந்தோர்
உற்றமாதவத்தோர்க்கெல்லாமுதவுபேரருள்செய்தாற்போற்
கற்றிலேனெனினுமன்னுய்காத்திடலுனதுபாரம்
தற்பரச்சுகாம்பாவுன்றன்றாளிணைமலர்கள்போற்றி. (74

எத்தனைத்தவங்களோசெய்தீங்கிடாகற்றிவாழும்
சித்தமதுடையசீவன்முத்தன்போலென்னைச்செய்வாய்
பத்தியேயிலாதகள்ளப்பையலென்றிகழ்ந்திடாமற்
சத்தியேசுகாம்பாவன்பர்சாருனின்னடிகள்போற்றி. (75)

பாருளோர்விண்ணுளோரும்பத்தியாயுன்றன்பாதஞ்
சேருதற்பொருட்டதாகச்செய்தவமனேகங்கோடி
நாருதான்பூவிற்சேர்ந்தநன்மைபோலடியார்கூட்டஞ்
சோர்விலாதெனக்குமீவாய்சொல்லருஞ்சுகாம்பிகையே. (76)

நினைத்ததுன்செயலேயன்றிநீசனென்செயலொன்றில்லை
மனத்திடையுதிசுதெல்லாம்மன்னுனின்னுள்ம்போற்செய்வாய்
கனத்தவுன்கழற்சீரன்றிக்காதலாயுனவேறில்லை
அனைத்தினுமுளசுகாம்பாவாதரித்தருளுவாயே. (77)

பித்தனென்றுலகோரென்னைப்பேசிடிற்பிழையுனக்கே
எத்துணையெனினுமேழையென்னதென்றிங்குகொள்ளேன்
சித்தனுய்ச்சிதம்பரத்தேசீருளநடனஞ்செய்யும்
அத்தனைக்ஷசர்பாகத்தமரிளங்கிளியேபோற்றி. (78)

செங்கைமான்மழுவதாடச்சீருளசடையிலுள்ள
கங்கையுமதியுமாடக்காரிருள்நஞ்சமாடப்
பங்கமாயிளக்கக்காளிபாரினில்நடனமாடுந்
துங்கமாம்பரமன்பாகந்தோன்றிளங்கிளியேபோற்றி. (79)

புலியதளிடையுடுத்தும்போர்வையுங்கரித்தோலாகத்
தலைபுனையரவுகங்கைதக்கனல்மதியமோடு

பலிகொளுமண்டையோடுபொரினில்நடனஞ்செய்வார்
தலைவியேசுகாம்பாவுன் றன் றுணிழலெனைச்சேர்ப்பாயே. (80)

ஆடையாபரணஞ்சாந்தமங்கத்திற்கொள்ளனீக்கிப்
பாடைமேற்படுக்கலாகிப்பாரினிற்சாம்பராகும்
பாடினைநீக்கியன்னாய்பாவியேன் றன்னைக்காலன்
காடிடாவண்ணமாள்வாய்நாடருஞ்சுகாம்பிகையே. (81)

நட்டணையெனவேகல்விநான்கற்றதெல்லாம்போதும்
விட்டலக்கணைவிடாதலக்கணையோடுமெற்றும்
விட்டுவிடாலக்கணையால்வேதாந்தநற்பதத்தில்
திட்டமாயிருக்கச்செய்வாயேரிளங்கிள்ளைனியே. (82)

கட்டமாமுடலோடுற்றுக்காய்பசிபொறுக்கமாட்டேன்
பெட்டகமமுதந்தேடப்பேருலகெலாமிங்கோடி
நட்டமதடையாவண்ணம்நானிலந்தனிலேயாள்வாய்
நட்டமிங்கிட்டநாதன்பாகமேவளருந்தாயே. (83)

உள்ளத்தாற்காணகில்லாதுள்ளத்துள்ளாடுகின்ற
கள்ளத்தாலுன்னையாருங்காணவிங்கரியதாமால்
மெள்ளத்தானீயேயாளமெய்த்தவம்புரியேனேனுங்
கொள்ளத்தான்வேண்டுமுன் றன்குறைகழற்குறுகுமாறே. (84)

மந்திரந்தனிலேயாசைமன்னியமனம்போதாதோ
சுந்தரமுடையமாதர்சூழ்ச்சியின் றுயர்போதாதோ
தந்திரங்களையிச்சித்ததப்புறுவினைபோதாதோ
முந்தியாள்சுகாம்பிகையேமூர்க்கனேனெனினுமிங்கே. (85)

கெட்டனுள்கெடவும்பாடைகிட்டியதெலாம்போதாதோ
சுட்டியேபிணமிதென் றுசுட்டனுளவைபோதாதோ
பட்டனுளவைகள்போதும்பையலுக்கருளிச்செய்வாய்
இட்டமாய்ச்சுகாம்பிகையேயேழைமேற்கிருபைவைத்தே. (86)

சாகாதமுறையைத்தேடிச்சாதனனிலைறந்துநின்று
போகாதமலமும்போக்கிபோதமாம்நினதடிக்கே
யேகாந்தஸ்தானந்தன்னிலென்பெலாமுருகனேக்கும்
யோகாந்தச்சீரருள்வாயுத்தமச்சுகாம்பிகையே. (87)

உனதுதாளிணையையென் றனுள்ளத்திற்பொருத்தியல்லா
லெனதுசிற்றறிவினாலேயென்னையானறியப்போமோ
மனதிடையருதுநின் றுமங்கையர்க்கரசேயேழை
யெனையுமிங்காண்டுகொள்வாயெழிலுடைச்சுகாம்பிகையே. (88)

எழுவகைத்தோற்றத்துள்ளேயெண்ணிலாயுகங்கிடந்து
புழுமுதலியோனியாவும்புக்கியனுள்போதாதோ
நழுகிடாதடியர்கூட்டனுட்டமாயிருக்கச்செய்வாய்
பழுதிலாச்சுகாம்பாவிந்தப்பாவியேற்கருளியின்றே. (89)

மனுவவன்முறைதப்பாமல்மாறிடுமெதியிலாமல்
பனுவலோர்வலிமைநோக்கிப்பண்புடனளித்துவாழும்
மினுமதியாசாரத்தாருன்மேன்மையாங்கருணையாலே
அனவரதமுமிங்காரவன்னையேயருளுவாயே. (90)

நின்னையேநினைக்குமன்பர்நேருமோரிடரிலாமை
யுன்னதுநினைவதாகுமுத்தமியீதுண்மையாமால்
இன்னலதடையாவண்ணமேத்தினேனுனதுதாளை
யன்னையேசுகாம்பாவேழையென்றனக்கருளுவாயே. (91)

வாழிமெய்யுருகவுன்றன்வார்கழனினைந்தேயிங்ங
ஞழிபோலளவுகாணுவன்புடன்புகழ்கள்பாடி
வாழினின்னடிகள்ளென்றுமம்மையென்னம்மையென்போர்
வாழியெப்பொழுதும்வாழிவாழுனின்கருணையாலே. (92)

வாழினின்சுரோத்திரியமாம்வளம்பளிப்பேட்டைவாழி
வாழினற்குடிகளானேர்வாழினின்வார்கழல்கள்
வாழியெப்பொழுதும்வாழிவாழவேவரங்களீவாய்
வாழிநீசுகாம்பாவுன்றன்வரங்களெப்பொழுதும்வாழி. (93)

மினுமுடிநீதிவேந்தர்மேன்மையாயென்றும்வாழி
பனுவலோர்மறைகளோதும்பண்புடைமறையோர்வாழி
சினமிலாமனத்தோருன்றன்சீரருள்பெற்றோர்வாழி
தனதான்யம்வளர்மும்மாரிதானமும்வாழிவாழி. (94)

வாழிவெள்விடையர்பாகம்வாழிளங்கிளியேயுன்றன்
வாழ்வளிதிருப்பாதங்கள்வண்ணமாமலரினூடே
வாழினின்கருணைக்கண்கள்வாழினின்னபயமீயும்
வாழ்வுளகரங்களென்றும்வாழிநீடூழிவாழி. (95)

வாழினின்றிருப்புகழ்கள்வாழினின்வலிமைவாழி
வாழினின்னருளினலேவையத்தைவைத்துத்தாங்கும்
வாழ்வுளவுதரம்வாழிவாழினின்சீர்களெல்லாம்
வாழியென்னளும்வாழிவாழிவையகத்துமெங்கும் (96)

வாழினின்பவனியென்றும்வாழியுன்னுற்சவங்கள்
வாழினின்னுற்சவங்கள்வண்ணமாயியற்றுனர்கள்




வாழிநின்றிருக்கோயிலைவண்மையாய்ப்புதுக்குவோர்கள்
வாழிநின்னடியர்கூட்டம்நீங்காதுவாழிவாழி. (97)

வாழிநின்றொழில்களைந்தும்வாழிநின்கருணைவெள்ளம்
வாழிநின்னடிவழித்தாய்வந்தனல்லடியரெல்லாம்
வாழிபல்வளத்தினோடும்வாழுநின்பெருமையேத்தி
வாழிநின்னடியடைந்தேவாழியெப்பொழுதும்வாழி. (98)

வாழிநின்பெருமைதன்னைவாரமாய்ப்படித்தோரெல்லாம்
வாழிநின்புகழையெல்லாம்யாழினிலமைத்திட்டோர்கள்
வாழிநின்புகழைக்கேட்டோர்வாழ்கநின்னருளினாலே
வாழியேசுகாம்பாவுன்பேர்வாழியெப்பொழுதும்வாழி. (99)

மங்களவடியார்கூட்டம்வாழிசோபனங்கள்பாட
மங்களமுழக்கமென்றும்மாறிலாதெழுகவோங்கி
மங்களமாகூஷீசர்க்கும்மாதுமைசுகாம்பிகைக்கும்
மங்களஜெயங்கள்கூறல்வாழிநீடூழிவாழி. (100)

---

சிவமயம்.

# ஸ்ரீ ஆட்சீஸ்வரர் அருளிரந்தமாலை

## ஆசிரிய விருத்தம்

என்பிராணநாதனுயென திருகண்மணியுமாயெங்குனிறைபுரணமாகியெந் தெந்தவுயிர்கடொறுமுள்ளும்புறம்புமாயேகனுயனேகவடிவாம், உன்பெருமை தனையறியவொருவரால் முடியுமோவுத்தமா நித்யவடிவே யோதாமலெனையறிய வேதாகமப்பொருளினுண்மையையெனக்குமீவாய், தன்பெருமையறியாததானு னினைநம்பினேன்ஜகதலத்தவர்கள்போலத்தம்மைதாமுணராதுதலைகீழதாய் நின் றுதாக்குறுதலென்றுமில்லா, வன்பர்களருமையையுமுனதருட்பெருமையையு மனுதினமுமறவா வண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள்செயாகூஷீச வென்றன்குருவே. (1)

ஆதரித்தாளாமலிக்காலம்விடுவையேலடிமைபோம்வழியதென்னேவறிவிலா முழுமூடன்மாபாவிநானெனவாதிநாள்கண்டிருந்தும், பேதித்திவ்வுலகதனைமெய் யென்றும்பொய்யுடலை நானென்றும்பிரியமோடுபேராசையுட்கொண்டு பேயுலக னுயினேன் பேதையேனுனைமறந்து, நாதனின்னடியிணையையென்னதறியாமை யானுடாதுநாள்கள் போக்கிநாயினுங்கடையானவெனையறிஞர்கூட்டனடுவாழவி ன்றருளையீவாய், ஆதிகாலத்தினீர்விளையாடுபெருமையினை யனுதினமுமறவாவ ண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள்செயாகூஷீசவென்றன்குருவே.

அருள்செயாதிக்காலம்விடுவையேலிவ்வுலகிலாதரிப்பவரில்லையேயாருடனு மென்குறையைச்சொல்லாமனெஞ்சுமேயழுதுபலனென்றுமில்லேன், பொருள் பூமிபெண்ணுதியானவையிலெனதுமனம்புகுந்திங்குநின்றுமேலும்போரிட்டு வரு வதிங்குரைப்பதற்கியலாதபுதுமையாமென்சொல்லுவேன், மருளென்றும்மாறுத மனமுடைப்பாவியெனைமன்னவாவாண்டுகொள்வாய்மக்களைப்பெற்றவர்கள் குற் றமதுபாருமன்மனம்பொறுத்தாளல்போல, அருளைவிட்டகலாதவறிஞரதுபெரு மையினை யனுதினமு மறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள் செயாகூஷீசவென்றன் குருவே. (3)

அடியவர்களுள்ளமேகோயிலெனவெப்போதுமகலாமல்வாழ்பரமனே வண் டகோடிகளெலாமுனதுவிளையாட்டலோவாதியாயநாதியானுய்,கொடிய மாபாதக ன்சிறியனெனனினையாதுகோணுமலென்னையீர்த்துக் குற்றமது பாராதுமுத்தங் கொடுத்தன்புகொண்டணைத்தாண்டதுரையே, படிமீதுமிடிபிணிமற்றேதுமெ

ஜெனுடாதபாக்யமுடன்யோக்யமானபரிசுதந்தியான்வேண்டுங்குறையெலாம்போக்கியேயாருளோர்மெச்சவருள்வாய், அடியவர்கள்கூட்டம்விட்டகலாதபெருமையினையனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள் செயாகூஷீசவென்றன் குருவே. (4)

நாளுமெனக்குளறுமகமமதையென்னுளம்நாடாமலருள்புரிகுவீர்நாளுக்குநாளெனதுசெயலதற்றுன்செயலைநாடுதற்கருள்புரிகுவீர், போனாலுமெனதுசெயல்வாசனதோஷம்புலப்படாதருள்புரிகுவீர்பொன்காணிபெண் மற்றயெந்ததோஷமுமென்முன்புலப்படாதருள்புரிகுவீர், வானளுந்தேவற்குமேற்கோனீராதலால்வாட்டமதுபோக்கியருள்வீர்வகையிலாதவனெனது குற்றங்க ணினையாதவள்ளலேயிருகண்மணியே,நாளுமடியருளமகலாதபெருமையினையனுதினமு மறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள்செயாகூஷீசவென்றன்குருவே.

குற்றமதைநினையாதுநின்னடியர் குறைதீர்த்தகோனுனீயாதலாலேகுணந்தனைப்பாராதுன்னடியவர்க்கருளல்போற்குறைவொன்றுமிங்கிலாமல், நற்றவமெனக்கருளியடியர்தொகைநடுவிலென்னளுமேநீங்கிடாமல்நாயினுங்கடையனும்பேயனுக்கும்புரணமாமெளனநாட்டியருள்வீர்,செற்றவருளத்தினிற்கோயிலெனனீங்காதசெல்வமேதேவர்தேவேசிறியனுளம்வேண்டுவதைத் தடையிலாதென்றுமருள்தெய்வமேயாண்டவரசே, அற்றவர்க்குற்றவானினதருட்பெருமையினையனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள் செயாகூஷீசவென்றன்குருவே. (6)

ஆதிகாலத் தெனையணைத்து முத்தங்கொடுத்தன் புருகவருளினின்றீரதனைநினைந்திறுமாப்பு கொண்டிங்கலைந்தேனென்றையவிப்போதென்னைநீ, சோதிக்கநினைவையேல் நானுயும்வழியிலைதுன்பமிகவுளதாகுமால்சொந்தமெனவுன்றனதுதிருவடியைநம்பினேன் துஷ்டனேன்கடையனேனும்,ஆதியாய்நடுவுமாயந்தமாய்ப்பந்தமற்றகம்புறனிறைந்துநின்ருயறிவிலாச்சிறுவனெற்கினுமருளாதுவிடிலவனியோருனையேசுவார், ஆதிமறைதேடரியவுனதருட்பெருமையினையனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள்செயாகூஷீச வென்றன்குருவே. (7)

அடிக்கடிக்கென்றேகநானென்னும்வாசனையருமலேயெனைமறைத்திங் காட்டிவிடுனுடகமனேகமுண்டதையெனலளவிடற்கெளியதாமோ, படித்துமென்வாசகமனேகமாய்க்கேட்டுமென்பாழானசிந்தை நிலையாப்பாவியேனும்முடைய பழையவடியார்களின்பதத்தினிற்படியுந்தூளை, முடிக்குமுடிசூட்டினுனெனென்றவாணவமுடிந்துபோஞ்சாம்பராகிமோனமென்பதுவரவு முத்தனேமூதறிவை மூடனேனெனக்குமருள்வாய்,அடக்கம்வந்தருள்பெற்றவடியார்தம்பெருமையினையனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள்செயாகூஷீசவென்றன்குருவே. (8)

செல்வரதுபின்சென்றுசங்கடமுரைத்துத்தினந்தினமுஞணமின்றித்தேசங்களெங்குமோடித்திரிந்தலையாதசெல்வமெற்கருள்புரிகுவீர், கல்மரமிரும்பொத்த நெஞ்சையனல்மெழுகாய்க்கசிந்துருகவருள்புரிகுவீர்காசிமுதல் மூர்த்தியாங்கருணைவிளையாடலைக்கடையனேற்கருள்புரிகுவீர், செல்வரவிலாதனின்செல்வரது தொகைநடுச்சேர்த்தணைத்தருள்புரிகுவீர்செப்புமறைமாவாக்கியத்தத்வமசிமுடிவு தேறவிங்கருள்புரிகுவீ, ரல்லும்பகலுமில்லடியவர்கள்பெருமையினையனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள்செயா கூ்சவென்றன் குருவே. (9)

கணமேனுமுன்னதருளடியிணையைமறவாதகாலமெக்காலம்வருமோகாசினியிலுன்றனதுபழையவடியார்களின்கருத்தெனக்கென்றுவருமோ, மணமுள்ள பூமாலைமற்றெந்தமாலையும்மறந்தடியர் பாமாலையின் வாசனையை மேலாயணிந்தவர்க்கருள்செய்தவள்ளலெற்கருள்வதென்றோ, குணமிலானென்றுமேபெற்றவர்கள்பிள்ளையின்கோதினைக்குறிப்பதுண்டோகுணங்குறியனைத்தினுக் கதீதமாய்க் கோதற்றுகுருவாய்விளங்குபொருளே, அணுவினுக்கணுவாகியாண்டருள்பெருமையினையனுதினமுமறவாவண்ணமடியேனை யஞ்சலெனவாதரித் தாண்டருள் செயாகூ்சவென்றன்குருவே. (10)

ஆட்டுவிப்பவனுமாயாடுகின்றவனுமா யாவுமாயவையல்லா தாயந்தவுயிர்களொறுமுயிரினுக்குயிராயவரவர்செய்வினையினளவாய், சூட்டியானெனதென் னுஞ்சுமையதனையெடுமினெனத்தோற்பாவைக்கூத்தையாட்டுஞ்சூதறியாமலே மும்மலச்சேற்றிலாழ்ந்தூர்ப்பன்றிபோலுழன்று, நாட்டுகளிலஞ்ஞானநாடகமனேகமாய்நடிக்குமதைமெய்யென்றிங்கேநம்பியேயிற்றைவரைநின்னருள்மறந்துவீணுளெலாம்போக்குமென்ற, நாட்டமதடக்கினின்னருளதாம்பெருமையினையனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள்செயா கூ்சவென்றன்குருவே. (11)

அன்னாளிலென்னைஞனறியாதசிறுவயதிலன்னைக்குமேலன்பாகியாதரித்தென்முகத்துனதருண்முகங்கொண்டணைத்துமுத்தங்கொடுத்தாய், இன்னாளிலதைமறந்தவர்போலிருப்பதுவுனிதருட் கழகன்றிங்கேயெனனினைந்திருமாப்பு கொண்டனனேழையேனென்னைநீபார்த்திடாயேல், முன்னாளினல்வருக்கறமாதிபொருளுடன்மோனமதுணர்த்தியதுவும்மூத்தவடியார்குறையைத்தீர்த்ததும் பொய்யதெனமொழிந்திடுவராதலாலே, அன்னதைநினைத்தருளுன்னருட்பெருமையினையனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள் செயா கூ்சவென்றன்குருவே. (12)

முன்னவனியாவற்குமென்னவேதங்களுமூதுணர்வுபெரியோர்களும்முத்தருஞ்சித்தரும்பத்தியுளபேர்களும்மொழிந்தசொற்றுணையாமென்றே, சொன்னவர்

கள்வாக்யமதையுண்மையெனனம்புவோர்சுகவீடுமெளிதிலடைவார்சோம்பலுடையென்போலவாய்மதம்பேசுமவர்சுகலாபமடைகிலாரே, முன்னனீயென்னுடைய வல்வினைகள்முழுதுமறமோனவாள்கொண்டுவீசிமுத்தங்கொடுத்தணைத் தாண்ட பெருந்தயையினைமுற்றுங்கெடாமலருள்வீர், அன்னவாகனன்மாலறியாத பெருமையினையனுதினமுமறவாவண்ண மடியேனையஞ்சலென வாதரித்தாண்டருள் செயாகூஷீசவென் றன்குருவே. (13)

எனதருட்செல்வனீயெனதருட்கோலனீயெனதருட்கண்மணியுனீயெனதருட்டந்தைனீயெனதருட்டாயுனீயெனதருட்சுற்றமுன்னீ, யெனதருட்சிந்தைநீ யெனதருள்வாக்குநீ யெனதருட்செயலெலானீயெனதருட்பாவனீ யெனதருட்புண்யஙீயென்னதறிவறியாமைநீ, யெனுமறிஞர்புகழுனீநிற்குந்தன்மையினை யெந்தனுக்கறியவெளிதோயெம்பிரானுன் றன்மேலவர்பாடுகவியினு லொருசிறிதறியலானேன், அனைக்குமேலன்புளாய்முற்றுமருளூன்னருளையனுதினமுமறவா வண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள்செயாகூஷீசவென் றன்குருவே.

அறிவுமறிவானுமா யறியாதபாசமாயாவுமாயவைகளன்று யறிந்துமறியாது போலிருந்துமென்னறிவினைமறைத்தாட்டும்விளையாட்டுள்ளாய், பொறியுமாய்ப் புலனுமாய்ப்புதுமையாங்கரணமாய்ப்போதமுறுசிவனுகிப்,புண்ணியம்பாவமெனுமிருவினைப்பகுதியாம்பிறப்பிறப்பதனிலாழுங், குறியினிலழுந்தினுன் குணமிலாப் பேதையாய்க் குவலயத்தலைவதாகுங்குறைகள்வைத்தாயெனியாருடன் சொல்லுவேன்கோதிலுமைபாகங்கொண்டாய்அறிவினுக்கறிவாகியருளுமுன்பெருமையினையனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித் தாண்டருள் செயாகூஷீசவென் றன்குருவே. (15)

என்னுடையதேகமேயானெனவிருந்தவெனையிரவினிற்கனவுதனிலேயெள்ளளவுபேதமும்வையாதிவ்வுலகினையுமென்னையும்விழுங்கிவெளியாய், உன்னுடையபூரணத்திருனேக்கினுன்மெளனமுதவுதீக்கைபெற்றும்யானுணராதிவ்வுலகினதுபிராந்தியிலழுந்தியேயரவெனப்பழுதையதனைத், தன்னுடையவறியாமையின்வசப்பட்டிங்குத்தடிகொண்டடிப்பதேபோற்றுழ்வுற்றிங்குன் னருள்மறந்துமென்னுளுமோர்தடைபடாதருள்புரிகுவீர், அன்னைக்குமேலாகவருள்செயுன்பெருமையினையனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித் தாண்டருள் செயாகூஷீசவென் றன்குருவே. (16)

என் றனதுடலமதையிதுகாறுனெனவிறுமாப்புகொண்டவென்னையிந்தவுடல்பொறிபுலன்கரணமுஞ்சீவனுமினுமற்றதத்வம்யாவும்,உன் றனைச்சேர்ந்ததலமதுவிளையாட்டினுலுலகுயிர்கள்சேர்த்துனின்றேவூனைநாடகமாட்டியுயிரினுக்குயிரதாயுளும்புறம்புமாய்நடிப்போ. மென்றெனக்கருள்செய்தவென்பிராணநாதனேயெனைமுனுளாண்டதுரையேயினி யெந்தவாழ்வினிலுமெனதுள்ளம்நாடாடி

லேழையேற்கருள்புரிகுவீர், அன்றென்றுமாமென்றுமில்லாதபெருமையினையனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள் செயாக்ஷீசவென்றன்குருவே. (17)

என்றனாலறியப்படாதநின் றிருவடியையிரவுபகனினைத்துநின் றிங்கேழையேன்சிந்தைசெயமௌனமாந்தீக்ஷைவைத்தின்பமாமருடந்தாய்நீ, உன்றனாலொருகுறையுமில்லைநின்னடியவர்களுறவைவிட்டகலாதுவாழுண்மையுடையறிவினையுமருளினாயதனையென்னுணர்விலாமையான்மறந்தேன், என்றெனதுகையைவிடநினைவையேலிவ்வுலகமேசுவதுமுடிவதாமேயெந்தையேயுனதருட் பூரணானந்தமதையின்றெனக்கருள்புரிகுவீர், அன்றெனக்கருள்செய்தநினதரும்பெருமையினை யனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள் செயாக்ஷீசவென்றன்குருவே (18)

அறிவேதுமில்லாதவசடனென்றென்னைநீயாதிகாலந் தெரிந்தென்னறியாமைபோக்கிநின்னருடாக்கியேசுத்தவறிவாக்கியாண்டதுரையே, குறியேதுமில்லாக்குணக்குன்றமேயுனைக்கூடிக்கலந்தவடியார்கூட்டங்கண்டுவினிற்பேராதுவாழ்கின்றகுணம்வரற்கருள்வதென்றோ, நெறியிலாநெறிதன்னையடைவாரைச்சாராதநெறியெனக்கென்றருள்வையோநேற்றுளாரின்றில்லையென்றுநிலைமறவாதநெறியருள்செயின்றுமுதலாய், அறிவாகியன்னைக்குமேலானநின்பெருமையனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள் செயாக்ஷீசவென்றன்குருவே. (19)

உன்னையான்வேண்டுபரிசதனையுங்கொடுத்துநல்லருளையுங்கொடுத்துமேலாமுன்னதடியார்களதுகூட்டமதில்வாழ்ந்துநானுன்னடிகலப்பதென்றோ, என்னையறியாதசிறுபிள்ளையெனநினையாதுவெளியேனைவலியவீர்த்தேயின்பங்கொடுத்தணைத்தாண்டதிறனினையாதயேழைக்குடும்பனாகித், தன்னையுந்தனதருட்டலைவனையுமறந்தியான்றையலார்மையறனிலேதலைகீழதாய் நின்றுபாவியேனலையாமற்றற்பராவல்லையருள்வாய், அன்னைக்குமேலாகவருளுநின்பெருமையினையனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள் செயாக்ஷீசவென்றன்குருவே. (20)

வானுமாய்ப்புவியுமாய்மலையுமாய்க்கடலுமாய்வளியனல்நீருமாகிமதியுமாயிரவியாய்வாரமாய்த்திதியுமாய்மற்றுளவிதங்களாகிக், கோனுமாய்ப்படையுமாந்தேவராய்மனிதராய்க்குணமிலாவசுரராகிக்கோமுதன்மிருகமாய்ப்பறவையாய்ப்பாம்புமாய்க்குளிர்வெம்மையனைத்துமாகி, நானுமாய்நீயுமாய்ஞானமஞ்ஞானமாயானென்னதென்னுமவரைநாடகமதாகவேயூனிலிட்டாட்டுவாய்நடராஜ பொதுவினரசே, ஞானமேயூட்டுனின்மேலானபெருமையினையனுதினமுமறவாவண்ணமடியேனையஞ்சலெனவாதரித்தாண்டருள்செயாக்ஷீச வென்றன்குருவே. (21)

திக்குவேறிலையென்றுன்றிருவடிநீங்காருளம்வாழ்செல்வக்குன்றே
பக்குவமில்லேனெனினுமாக்ஷியப்பாவருமருந்தைப்பாலிப்பாயே. (7)

என்னையானுலகிலுள்ளோரெவரிடத்துமென்பசியாலேற்பனல்லேன்
பொன்னேநன்மணியானேயன்பருளங்கோயிலெனப்பொருந்தினானே
பின்னேதுமறியாதேயென்னைவிடிற்றாங்குநரிங்கியாவர்கொல்லோ
வன்னைக்குமேலவனேவாக்ஷியப்பாவருமருந்தையளித்திடாயே. (8)

பூமியுள்ளாரெவரிடத்துமெனதுபிணிபசியாறப்பொருந்தமாட்டேன்
ஆமினியுன்னாலாகாக்காரியகாரணங்களிலையானதாலே
சேமமுனதிடத்திருக்கவடுத்தவெனைமுனியாதுன்றிருவுளத்தின்
னேமமதையருளிச்செய்தாக்ஷியப்பாவருமருந்தையெனக்கீவாயே. (9)

பெரியருட்குணங்கடமிற்கிஞ்சித்துமில்லாதபேதைனாயேன்
கரியகுழன்மாதர்தமைக்கனவினுமேநாடாதாள்கருணைவள்ளால்
துரியநடுவீடதனிற்றூங்காமற்றூங்கினான்சுகமாய்வாழ
வரியபரம்பொருளேயென்னாக்ஷியப்பாவருமருந்தையளித்திடாயே. (10)

சித்தசுத்தமுள்ளனல்லதிருவடியாரவரடியைச்சேர்ந்தேனல்லேன்
பத்தியினாலுனது திருவடியிணைநான்மறவாமற்பணிந்தேனல்லேன்
செத்துனானினிப்பிறவாவழியெதுவோவதனையுன்றிருநோக்கத்தால்
வைத்தெளியேன்கடைத்தேறவாக்ஷியப்பாவருமருந்தைவழங்குவாயே. (11)

இன்னமின்னமுலகரிடத்தென்பசிக்கும்பல்பிணிக்குமேற்பனல்லேன்
முன்னடியார்தமக்குள்ளும்புறம்புந்தோன்றாத்துணையாய்முன்னின்றானே
பன்னுவதேனுன்றனையான்கைவிட்டாற்பழிப்புவந்துசாருமந்தோ
அன்னைக்குமேலாமென்னாக்ஷியப்பாவருமருந்தையருள்செய்வாயே. (12)

தேகமென்றும்புலனென்றுங்கரணமென்றுஞ்சீவனென்றுந்தெரியானானேன்
மோகமுடையாணவமாமுளையதனைனினைவினிடையூன்றாவண்ணம்
போகபோக்கியங்கடமையென்னதெனநினையாதுபுதுமையாக
யேகவறிவாகும்வண்ணமாக்ஷியப்பாயேதேனுமருள்செய்வாயே. (13)

என்னையெனக்கறிவித்தும்பழையவாசனையிலொன்றுமேகவில்லை
யென்னேனானுனையன்றியாரிடத்தென்முறையிடுவேனெந்தாயந்தோ
கன்னெஞ்சவினையுடையானென்றுனுளம்நினைத்திடில்யான்கதியொன்றில்லேன்
அன்னையினுமன்புடையாயாக்ஷியப்பாவருமருந்தெற்கருள்செய்வாயே. (14)

அறிவுருவென்றெனையெனக்குத்திரிபையமெலாமகற்றியருள்செய்தாண்ட
குறியதனிற்பிறழாதுநிலைநின்றுதூங்காமற்றூங்கவேண்டிச்
செறிபுலனந்தக்கரணச்சேட்டைதனிற்செல்லாதென்செயல்போய்வாழச்
சிறியேனுக்காக்ஷியப்பாவருமருந்தைப்பூரணமாய்ச்சிறப்பிப்பாயே. (15)

குணங்குறியொன்றில்லாதகொள்கைவடிவுடையாய்நின்கோலமென்னே
மணங்கமழுமடியார்களுளம்நீங்காக்கோயிலெனவாழுங்கோவே
பிணமதனையொத்தேனுயிடினும்பெற்றவர்க்குப்பிள்ளையன்றோ
கணமேனுனீங்காமலாக்ஷியப்பாயருமருந்தெற்கருள்செய்வாயே. (16)

குற்றமெலாங்குணமாகக்கொளுபவனென்றுன்னடியார்கூறக்கேட்டும்
நற்றவமொன்றில்லாதனுயினிலுங்கடையானநாயினேனின்
சொற்றகுறிதனினீங்காச்சுகானந்தவாழ்வதனிற்சுகிப்பதென்றோ
அற்றவருக்கற்றவனீயாக்ஷியப்பாவருமருந்தெற்கருள்செய்வாயே. (17)

நல்லடியாரென்னுளுமுன்றனதுதிருவடிவாழ்னுட்டனீங்கா
ரல்லரெலாமென்போலவல்லிலேவாழ்ந்துசுகமடையாரந்தோ
பொல்லாதமகவெனினும்பெற்றதாய்கைவிடாப்பெற்றிபோல
வல்லவனேயாண்டருளியாக்ஷியப்பாவருமருந்தெற்கருள்செய்வாயே. (18)

நித்தமுனின்னடிமறவாவடியர்குழானடுவதனினீங்காவண்ணஞ்
சித்தமுடையறிவில்லேனுயிடினுமுன்புகழைக்கேட்குங்காலம்
பத்தியுளபயல்போலக்காண்பதல்லாலுள்ளபடிபாவிக்கேனன்
அத்தனேயாக்ஷியப்பாவடிமைக்குமருமருந்தையருள்செய்வாயே. (19)

என்னுடையதேகமிகவிளைத்தாலும்பசிப்பிணியாலேற்பனல்லேன்
உன்னுடையதிருவருளின்சித்தமதென்பாக்கியமென்றுன்னுவேனன்
பின்னுமிவன்சிறுபுத்தியுடையானென்றென்னைநீபேதிப்பாயேல்
முன்னவனேதாங்குனரில்லதனுலேமுற்றிலுமேதுணையாயோர்மருந்தீவாயே. ()

வேறு

வினைவழியாய்த்தாயுதரப்பையதனிற்கருப்பாய்ந்துவிதிதன்னாலே விளைமதியும்பத்தாகியங்கமெலாஞ்சரியாகவெளியேவந்து, பனிமூன்றுமதியதுபோனுளுக்குளுள்வளர்த்தபாலன்றன்னைப்பருவமதுபார்த்துகந்தபேரிட்டைந்தாம் வயதிற்பள்ளிசேர்த்துத்,தினந்தினமும்விதம்விதமாய்நெய்யன்னம்பாலுடனேதிடமாயூட்டித்தேசத்தினம்மகப்போலியார்க்குளதென்றிங்குள்ளமதிற்றினமாராய்ந்து, கனதனமுமொத்த விடத்தொருபெண்ணைப்பார்த்துநல்லகாலந்தன்னிற்கட்டுங்காலாக்ஷியப்பாகாலன்வரிற்றடுத்திடவோர்மருந்துமுண்டோ. (21)

காலையினினமதுபிள்ளைக்கொருகுழந்தைவேண்டுமெனுங் கருத்துமேலாய்க்கணந்தோறுமறவாமலவரிட்டதேவதைக்குக்காலந்தோறும், ஞாலமதிலபிஷேகவலங்காரநைவேத்தியதூபதீபம்நன்றாக நடத்திவந்துமவரவர்முன்செய்வினையாலனந்தீங்காகப், பாலர்கள்சுடுகாடுபோனதையும்வயிறெரிந்துப்பலநாளேங்கிப்பதைபதைத்துப்பூமிதனிற்பிரமனம்மையிதற்குத்தான்படைத்தானோவென்,போலுமவரெவ்வுலகிலிருப்பார்களையையோவென்பார்தம்மோடென்னுளுஞ் சேராமலாக்ஷியப்பாவெந்தனுக்கோர்மருந்தீவாயே. (22)

உனதுதிருவடிதன்னைப்பழவடியார்தினந்தோறுமுன்னியுன்னி யொருக்காலுமறவாமற்சாக்கிராதீதநிலையொன்றிவாழ்வார், எனதுநடையினமுளதாயிருந்தும்பெற்றவர்களேசிடார்களெனநினைந்துன்னுடையதிருவடிகலந்துபிரியாதுவாழவேண்டும், நினதுதிருவுளப்பாங்கிலெனதெண்ணமீடேறநினையாதயைநீயிருந்தாலடியேன்கைத்தூக்கித்தாங்குனரில்லையிங்குகண்டாய்,மனதுதான்பெரிதுபண்ணியொருகுறையுமில்லாமல்யானும்வாழமாதேவேயென்றனுக்கு மோர்மருந்தை மகிழ்வுடனேயீந்திடாயே. (23)

எல்லைகடந்தெவ்வுலகுமுயிர்க்குயிராயிராமலிருந்தெங்குமாகுமெந்தாயுன்னடிமுடியைத்தேடினதாலியாவர்க்குமெட்டோமென்றாய், அல்லுபகற்றோன்றாதவன்பருளங்கோயிலெனவகலோமென்றுமல்லல்களிங்குசுகமென நினையுமற்பருளம்மறைவோமென்றும், தில்லைமுதலெத்தலத்துனிறைந்துனின்றுவிளையாடுந்திறத்தையெல்லாந்தேவர்முதலியாவர்களுந்தெளிவுடையபத்தியின்றேற் றெளியாரென்றாய்,எல்லையதுகாணுமற்றிகைத்துனின்றுபதருமெனைக்கடைக்கண்ணாலேயெந்தாயேபார்த்திரங்கிநின்னடியைக்காணவொருமருந்தீவாயே. (24)

வேறு

பொய்யைத்தான்மெய்யெனவும்வெகுநாளாய்க்காலமதைப்போக்கியந்தோ
மெய்யைத்தான்றெரியாமற்சுடுகாடேமுடிவாகச்செல்லலானுர்
வெய்யவினையேன்றனைநீயிதுவரையுங்காத்ததொருமேலிங்கல்ல
தெய்வமேயாக்ஷியப்பாதிருவடியைக்குறுகவொருமருந்தீவாயே. (25)

வேறு

தயவுவைத்தடியார் பேரிற்றக்க பூரணனேக்கத்தா
லுயவைத்தவன்பின்பார்வையொப்பிலாய்கருதப்போமோ
பயல்வைத்தசிந்தைதனேக்கம்பாரினீயறிந்திடாயோ
மயலதையாக்ஷியப்பாமாற்றியோர்மருந்தீவாயே. (26)

மைந்தரைப்பெற்றபேர்க்குமற்றுகன்மனமுமாமோ
எந்தையேயென்செய்போதுமென்னைநீயாளவேண்டும்
கந்தனையளித்தாய்வேளைக்கண்ணிறைலெரித்ததூயா
மைந்தனென்பந்தநீக்கமருந்தினையருள்செய்வாயே. (27)

எளியனேன்படும்பாடெல்லாமென்றுனீரோர்ந்திருந்தும்
தெளிவிலாமூடனுயான்றிரிதலுமழகுதானே
வளியுடன்பூனீர்தேயுவானுடன்யாவுமானாய்
அளிகிலேன்சிந்தையெந்தாயருமருந்தொன்றீவாயே. (28)

அப்பனீயன்னைனீயேவருளுடைக்குருவுனீயே
செப்பியவாக்குனீயேசெய்தொழிற்காரணனீயே

யிப்புவிதன்னில்யாதுமெங்கும்போயொன்றுங்கேளேன்
தப்பெலாமொழித்தாக்ஷீசாதக்கதோர்மருந்தீவாயே (29)

அப்பரைக்கல்லிலிட்டேயாழ்கடற்போட்டவன்னாள்
தெப்பமாய்த்தாங்கிமேலாந்திருவருட்கலரயிலேற்றி
யெப்போதுமிடர்வராமலெந்தையேகாத்தவண்ணம்
இப்போதுமாக்ஷியப்பாவெனக்கொருமருந்தீவாயே. (30)

திருஞானசம்பந்தர்க்குந்திருவாதவூராளிக்கும்
அருளுடையப்பருக்குமருமைசுந்தரமூர்த்திக்கும்
பொருளதைக்கொடுத்துமெந்தாய்போதனேவாண்டதேபோ
விருளெலாம்போக்கவெற்குமேதேனுமருந்தீவாயே. (31)

பெத்தனுய்த்திரிந்தேனென்றேபேயனையிகழவேண்டாம்
பெற்றதாய்தந்தையாரும்பிள்ளைமேற்பிழைசொல்லார் போற்
கத்தனேநின்னையன்றிக்காரணருலகிலுண்டோ
வத்தனேவாக்ஷீசானின்னடிமைக்கோர்மருந்தீவாயே. (32)

ஏழையேனென்னசெய்வேனெந்தைநீயருள் செயாக்கால்
பாழிலேதிரிவனந்தோபரமகல்யாணமூர்த்தி
தாழ்விலாதென்னையிந்தத்தாரணிபுகழுமாறு
வாழ்வினையடையவாக்ஷியப்பனேமருந்தீவாயே. (33)

பெற்றவர்மக்கடம்மேற்பிழையதுசொல்வதுண்டோ
வுற்றவர் குற்றந்தன்னையொப்பிலாய்குணமாக்கொள்வோய்
சிற்றறிவுடையவெற்குஞ்சீருளமருந்தொன்றீவாய்
பற்றிலருளத்துநாடும்பரமனேயென்னையாண்டே. (34)

அடியனேன்செயலினாலேயாவதொன்றில்லைகண்டாய்
கொடியன்செய்குற்றமெல்லாங்கோதெனநினைந்திடாதே
மிடியுடன்பிணிகள்சேரா மேன்மையாமருந்தையீந்து
படிமிசையின்றேயாக்ஷியப்பனேயருளுவாயே. (35)

அருளினாலுன்னையன்றியாதரிப்பவர்களில்லை
பொருளினைவேண்டுமெட்டும்புண்ணியவடியர்க்கீவாய்
மருளனேனியாதொன்றிற்கும்மனமதுசோராவண்ண
மிருளறுத்தாக்ஷியப்பாவெனக்குமோர்மருந்தீவாயே. (36)

வேறு

சோதியாயிருட்பிழம்பைச்சூறையாடும்பானுபோ
லாகியாகிநடுவுமாகியந்தமாகியாதுமில்

பேதமாகிப்பெண்ணுமாகியாணுமாயபேதமாய்ப்
பூதமாகிப்பொறிகளாகிப்புலன்களாயுமானவா. (37)

கடந்தயெல்லேசேடமாகிக்காணுதசோதியாய்க்
கிடந்தநின்னைமாலுமயனுங்கிட்டுதற்காய்மண்ணினைக்
கிடந்துவானிற்பறந்துசென்றுங்கிட்டொணுதயர்ந்திட
வடர்ந்தநின்னையானுங்காணவருமருந்திங்களிப்பையே. (38)

வேறு

அன்பருளமாலயமாயமர்ந்திருந்துவாழ்ந்துமவர் வேண்டுகொள்கையெலாம் வழுவாமலளித்துந், துன்பென்றும்வாராமலின்பமதையருளித்துரியபரம்பொருளாகித்தோன்றுனற்றுணேயாய்த்,துன்னுசுடரேயென்றன் துர்க்குணத்தைநீக்கித் தூங்காததூக்கமதிற்சுகமாய்வாழ்ந்திடவே, அன்னேயினுமிக்கவனேயாக்ஷியப்பாவெனக்கிங்கருமருந்தொன்றீந்தருளியாண்டுகொள்வாயரசே. (39)

உன்னுதேயுன்னியுன்னுமுன்னதன்பருளத்திலொரு போதுனீங்காதேவாழும்பெரியோனே, பன்னுளும்பன்னிபன்னிப்பாடியாடிப்போற்றிப்பணிந்துபணிந்தழுதுனதுபணிவிடைகள்செய்தும், என்னுளுந்துன்பறியாதின்பவெள்ளத் தாழ்ந்துமேங்காமலேதுக்குந்தூங்காமற்றூங்கி, முன்னுளின்படைந்தார்மூடனேன்யான்கெட்டேன்முத்திபெறவாக்ஷியப்பாமோனமருந்துண்டே. (40)

நீயிருந்தநாளெல்லாம்நானுமிருந்தென்றுனினேப்பிரியாதிருந்துனேயுமெனேயுமறந்திருந்தேன், தாயிருந்துந்தன்பசிக்குப்பால்வேண்டிவருந்துந்தன்மையைப் போலேதுமறியாதிருந்தேனென்னேச், சேயுடையாரதன்பசியைத்தெரிந்தூட்டலேபோற்றெரியாதசிறியவனென்றெனக்குமருள்செய்தாய், பேயேனுனதைமறந்துபிதற்றுமலாக்ஷியப்பாவிப்பிறப்பினிலோர்மருந்தெனக்கீவாயே. (41)

பேரின்பமின்னதென்றுதெரியாதகாலம்பிடித்திழுத்துப்பிரியமுடன்பின்னுமுன்னும்பாரா, தோரின்பமுன்னேயன்றியில்லேகண்டாயென்றேவுத்தமனேயடுத்தடுத்தென்னுணர்வுதனிலூட்டிச், சாரின்பதுன்பமெனுஞ்சடலச்சழக்கறுத்ததன்மையையானென்னசொல்வேன்புன்மையுடைச்சிறியேன், நாரதுவும்பூச்சேர்ந்துநன்மணம்பெறுதல்போனுமுனேச்சேர்ந்தின்பம்பெறமருந்தீவாயே.

பெற்றவொன்றையின்னதென்றுபேச்வறியாதபிள்ளேயினும்பேதமைமிக்குடையசிறியேனுன், கற்றறியேன்கேட்டறியேன்கற்றவரையேனும்கண்டொன்றுகற்றுணருங்கருத்ததுவுமில்லேன், சொற்றசொற்கள்சொலத்தெரியாச்சோம்பேறிப்பயல்போற்றெண்டுசெய்யுமன்பில்லாத்துர்க்குணத்தேனெனினும், அற்றவருக்குள்ளிருக்குமாக்ஷீசாயென்றனருமையுள்ளகண்மணியேயருமருந்தீவாயே

அரசேநின்னருளுடையவன்பரெலாங்கூடி யானந்தவாரிதனின்மூழ்கியுளமகிழ்ந்தார், புணர்சேருநெஞ்சதனுற்புன்மையறிவுடையேன்பொய்யதெலாமெய்

யென்றுன்பொன்னடிநான்மறந்தேன், உரையுணர்வொன்றில்லாதவுன்னத்ருண் மோனமுணரவெனக்கறிவருளியுன்னதருளடியாம், பரைநிழலினீங்காதுன்பர சுகம்யானடையப்பரமானமருந்தொன்றையாக்ஷியப்பாவருளே. (44)

பாக்கியங்கள்பெற்றவுன்றன்பழவடியாரன்றிப்பரமசுகம்பெற்றவர்கள்வே றொருவருளரோ, தூக்கியுன்றனன்னிலையிலேற்றிமுன்போலன்றித்தூங்காமற் றூங்கவைத்துஞ்சுணங்கனைப்போனாயேன், தேக்கிஜகவாழ்வதனிற்சிறப்புளதெ ன்றதனைத்தேராதுபாராதுதிகைத்திங்ஙன்றிரிந்தேன், ஆக்கியளித்தழித்தனுக் கிரகமுடனேமயக்கஞ்செய்கின்றவாக்ஷியப்பாவருமருந்தீவாயே. (45)

உனதுசெயல்யாது மென்றுலகிற்சொல்வதன்றியுள்ளபடியொருக்காலுமெ வருமுன்னலில்லைத், தனதுசெயலுள்ளதென்றுதான்பிடித்தபிடியேதவறுதுமர்க் கடம்போற்சார்போதனாகி, எனதெனதுயானெனப்தெள்ளளவுமறவாதேழ்பிறவி வாரிதியைநீந்தவகையுளதோ, கனதுக்கமிகவுடையேன்கருணையிலானாலாக்ஷியப் பானின்கழல்சாரவருமருந்தீவாயே. (46)

மறவாதுன்னருளதனைப் பெற்றபழவடியார்மாறுப்பேரானந்தவாரிதியின் மூழ்கிப், பிறவாமையிறவாமைப்பெற்றியினான்மோனம்பெற்றபெரியோரவரே மற்றவர்களியாரே, துறவாவதவாவறுத்தவாங்கதுவேயன்றித்துன்பதனையுள னீங்காத்துறவதுமோர்துறவோ, அறமாவதின்னதெனவறியாதவெனக்கிங்காக்ஷி யப்பாவனைத்துமறியருமருந்தீவாயே. (47)

ஆண்டதிறமறவாதுன்பழவடியாரெல்லாமனுதினமுனின்னடிவிட்டகலாது வாழ்ந்தார், ஈண்டுலகத்தோற்றத்தாலெண்ணியெண்ணிநைந்தேயேற்காதுனின் னருளையிழந்தழுதனன்றோ, பூண்டதொருகோலமலாற்பொருளறிந்தேனில்லை பொய்யினைமெய்யாகவெண்ணிப்புவிவாழ்ந்தேனடிமைப்,பூண்டவர்களுள்ளமதே கோயிலெனவாழும்புண்ணியனேயாக்ஷியப்பாவருமருந்தீவாயே. (48)

என்னையிந்நாளதனிற்காவாதேவிட்டாலிவ்வுலகிலெவருமிலையெனவறிந்த னீயே, யென்னேநான்படும்பாடுநீயறியாவொன்றோயேழைக்குச்சொல்கின்றதிற முமமைந்துளதோ, பன்னிபன்னிச்சொல்வதனாலாவதொன்றுமிலையேற்பைய லுக்குப்போதும்வரைகைகொடுத்தாளையா, அன்னையினும்பெருந்தயையையுடை யவனேயாக்ஷியப்பாவிங்கென்றனக்கோரருமருந்தீவாயே. (49)

என்னைவிட்டு வேலையுனக்கெங்கேயென்னப்பாயேழையடியாருளமேகோயி லெனவாழ்ந்தே, பொன்முதலாய்க்கேட்டதெல்லாமவர்க்கருளியின்னம்போதாத பேரின்பம்பூரணமாயருளும், முன்னவனேயான்வேண்டுமுறைப்படியேயருள மூத்தவடியாரருளினேற்றவர்க்கத்தோன்ற, வன்னையினுந்தயையுடையவாக்ஷி யப்பாவரசேயடியேனுக்கன்புடனோர்மருந்தீவாயரசே. (50)

ஆதரிப்பார் வேறொருவரில்லையெனவறிந்து மறியாதுபோலிருப்பீருன்ற னருட்கழகோ, கோதொன்றுமில்லானற்குணமுடையவடியார்கொள்கையெனக்-

கென்றுவந்துகூடிடுமோவையா, போதெல்லாம்வீணுகப்போக்கும்புல்லறிவைப் போக்கியுன்றன்பூரணமாமானந்தத்தழுத்தி, வோதரியவொருநிலையையுத்தமனே யாகூஷியப்பாநானறிந்திடவேவோர்மருந்தீவாயே. (51)

ஓதாமலோதுகின்றவுனதுபழவடியார்க் கொன்ருலுங்குறைவின்றியுனதருளீந்தனையே, பாதாதிகேசவரைப்பற்றுடனீயல்லபற்றறநின்னுளனீங்காப்பதியருணனென்று, மேதுக்குமுன்செயலாமொன்றிலையென்செயலாமெனவருள் செய்திருந்துமிந்தயேழையறிவின்றி, ஆதியுன்றனருளைமறந்தல்லல்படுகின்றேனுகூஷியப்பாவடியனுக்கோர்மருந்தீவாயரசே. (52)

சார்பில்லாதொன்றினிலுஞ்சராசரமுந்தாணுய்த்தற்பரமாயெப்புறனுஞ்சிற்பரமாய்நடிப்போய், சோர்வில்லாதுன்றனைத்தோன்ருத்துணையாய்நம்பிச்சுகானந்தவீடதனிற்றூங்காமற்றூங்க, வோர்வில்லங்கமுமென்றனுள்ளமதிற்சாராதோட்டியுன்றன்பழவடியாருள்ளமதுபோல, யாருமொருதுணையெனவும்பற்றகில்லேனுகூஷியப்பாவென்னுள்ளமதிங்காகமருந்துண்டே. (53)

கண்ணதுமாயென்றனிருகண்ணினுள்ளேமணியாய்க்கருத்ததுவாய்க் கருத்ததனுட்கருத்ததுவாய்நின்ருய், எண்ணுடனேயெழுத்தாகியெண்ணெழுத்துமறியாதெண்ணமெலெண்ணுபவர்க்கேற்றகுணமுடையாய்,பண்ணதுவாயப்பண்ணிற்கேற்றயிசைதாணுய்ப்பலருக்கும்பல்விதமாய்ப்பார்முழுதனடிப்போய், அண்ணவென்னுகூஷியப்பா சிறுமையெலாம்போக்கவரசேயோரருமருந்தையெனக்கிங்கீவாயே. (54)

அப்பனுமாயன்னையுமாயாவையுமாய் நின்ருயாகையினுலெனக்கென்ற செயலொன்றுங்காணேன், ஒப்பொருவரில்லையுனக்கெங்கெங்குந்தாணுயெவ்வுயிர்க்குமவ்வுயிராயுணர்த்துகின்ருயென்றுந், தப்பில்லாச்சாத்திரங்களனைத்துமிங்குசொல்லும்தனையுணர்ந்தார்பாமாலைதனிலும்யான்கண்டேன், எப்பொருளைப்பார்த்தாலுமாகூஷியப்பாமனந்தானென்னுடையதெனல்போக்கமருந்தொன்றீவாயே. (55)

துன்பெந்தகாலத்துமெனைத்தொடராவண்ணந்தோன்ருததுணையாகநின்றென்னையாள்வோய், என்பருவமென்றனக்குத்தெரியாக்காலத்தேயென்னையிழுத்தடித்தடித்துயின்பமுதமூட்டித், தென்பென்றுந்தளராமற்றிகையாதொன்றிற்குந்தேராதசிற்றினத்திற்சாராதென்னுளும், அன்பெனக்குப்பெருகிவாவாகூஷியப்பாவரசேயடிமைக்குமோர்மருந்தையன்புடனீவாயே. (56)

என்னேயிவ்வுலகதனிலிதுகாறுமிருந்துமேழைபடுந்துன்டமெலா மெண்ணுதற்கிங்காகா, தன்னதணுவின்றுமுதலடியேன்செய்குற்றமத்தனையும்பொறுத்தருளியானெனதிங்கென்னும், பொன்பூமிப்பெண்ணுசைகனவினிலும்போக்கிப்போகனிலமெவையிலுமென்னிச்சைபோகாவண்ணம், அன்னையினுமேலானவன்புடையோயாகூஷியப்பாவென்னரசேயோர்மருந்தெனக்கீவாயே. (57)

கடனானதெச்சீவரையுங்காக்குந்தன்மையதனாற்கடையேன்செய்குற்றங்கள் கணக்கிடுதலாகா, துடையவனீயாயிருந்துமுன்னைவிட்டாலெனக்கிங்கொருகதியுமில்லையென்றேயுனக்குநன்றாய்த்தெரிந்தும், கொடியேனைக்குவலயத்திற்கைவிடுவாயானாற்கொலைமுதல்பாதகங்கள்குறுகிடுமேயையா,விடமுதலெப்பிணிமருளுமென்றனைச்சாராமல்வேந்தேயென்னாக்ஷியப்பாமருந்தொன்றீவாயே. (58)

கொடுத்ததனைக்கொண்டதெனைநின்னருளாதலினாற்கோதெல்லாமென்னிடத்தேகுடிகொளலேனையா, பிடித்தபிடிநின்னையன்றிவேறோர்பற்றில்லைபேதையெனையின்னமின்னம்பிறப்பிறப்பிலாழா, தடித்தடித்துப்பாலூட்டியையந்திரிபகற்றியானந்தமோனமதிற்பூரணனோக்கதனாற், படுத்தலுறச்செய்வதுன்பாரமாக்ஷியப்பாபழவடியார்சேரவொருமருந்துமீவாயே. (59)

சார்ந்துன்றன்பதந்தன்னைச்சலியாதவடியார்தமக்குனருள்போதுமட்டுங்கொடுக்கும்பெருந்தயையைப், பார்த்துன்றனடியடைந்தேன்பட்சமதுவைத்துப்பையலெனைக்காத்தருளலுன்பாரங்கண்டாய், பேர்ந்துமனம்வேறொன்றைப்பிடிக்கின்றபெற்றிபேயேனைச்சாராமற்பெருந்தயையைப்புரிந்தே, சேர்த்திடுவாயடியவர்தம்தொகைநடுவேயாக்ஷியப்பானற்சோதியோர்மருந்தெனக்குமீந்தே. (60)

மறைத்தனையேயென்னுடைய மதியெதுவாய்விடுமோ மாமருந்தேமணியேயம்மணிக்குணிறையொளியே,பொறைத்தனமிங்கில்லாதபுன்மையறிவுடையேன்போதவுன்றனருளிலையேற்பேயனாவனந்தோ, குறைத்தனையேயுலகிலென்னைக்குற்றமுனக்கன்றேகோதொன்றுமில்லாதகுணக்கடலேயெவைக்கும், இறைத்தன்மைபூண்டவென்றனாக்ஷியப்பா வரசேயென்றனக்குமன்புடனோர் மருந்தினையீவாயே. (61)

உன்னையடுத்துவந்த வெனைப்பினுநன்றாயுணரவோர்மொழியாலுத்தமனேவொப்பிலருள்செய்தாய், தன்னைமறந்தகிலமுடன்றனுகரணமறந்துமிக்கதொருதத்துவங்களானந்தச்சித்தாய், உன்னவுமோர்திறமெனக்குநிதானமுடனீந்துநீநானுமொன்றாகுந்தன்மையையுமீந்தே,பின்னமிலாவருளளிப்பாய்பேதையெனக்காக்ஷியப்பாவோர்பெருமருந்தையன்புடனேயீந்தே. (62)

ஆதரவாயடியருளமாலயமாய்வாழ்ந்துமவர்வேண்டுபரிசிலொன்றுங்குறைவுபடாதளித்துங், கோதொன்றுமணுகாமற்குணங்களையேகொடுத்துங்குறையாதவானந்தசாகரத்தில்விடுத்தே, யாதினுக்குமஞ்சாதீரென்றபயந்தனையுமன்புடனேகொடுத்திட்டேயாண்டுகொண்டாரசே, ஆதரவிலாமலொருபேதையெனவாடுமடியேனுக்கோர்மருந்தையாக்ஷியப்பாவருளே. (63)

என்னதிருகண்மணியாயெங்குமொளிவிளக்காயாதினிலுமங்கங்குச்சோதிமயமாகிப், பொன்னையன்றிப்பணியதிலாப்புதுமைதெரிவித்தேபொய்ச்சகமுமுன்னைவிடயில்லையென்றேயிசைத்தாய், என்னாமோவென்றுசங்கைமுளைக்கவதைக்

கிள்ளியென்னிதயத்தேயிருந்திங்கென்னையறிவித்தாய், முன்னவனேவாகூஷியப் பாமுடியாதொன்றுளதோமூடனேன்யானென்றனக்குமோர்மருந்திங்கருளே.64)

அரசேயென்னாண்டவனேயம்பலத்தெம்மமுதேவகத்தியமாமுனிவரர்கடொ ழுதேத்துந்திருவே, புரைவழிசெல்புலன்கரணம்பற்றியுனைமறந்து பொய்யான வுலகநடைமெய்யென்றேயழுந்திக், கரைசேரும்வழியதனையறியாமலிந்தக்காயம தையானெனவதென்றேகலங்கிநின்றேன்,பரையென்னுமிளங்கிளியாள்பாகாநற்ப தியேபையலுக்கிங்கோர்மருந்தைபண்புடனிங்கருளே. (65)

ஆண்டவனீயன்றிமற்றோராண்டவனைக்காணேனதுவனக்கிங்கிதுவரையி ற்றெரியாதோதில்லைத், தாண்டவனேயான்வேண்டுபரிசதனையின்றேதந்தருள லுன்கடமைத்தாகமிகக்கொண்டேன், பூண்டபணிதேகமுதலியானுனினதென் றேன்பொய்யல்லவெனவதென்றல்பொய்யாகவருளி, காண்டலிங்கேயாவர்க்குமரி தானவாகூஷியப்பாவிக்கடையனுக்குமோர்மருந்தையருளே. (66)

கண்ணாரமனமாரவுன்றனுருக்கோலங்காணமலிருப்பளவுமென்கலக்கந்தீரா, தண்ணாடமுன்றன்றிருச்சன்னிதிநீங்காதேயருட்பாடல்பாடியுன்றனடி வணங்கி ப்போற்றி, மண்ணாடர்விண்ணாடர்மற்றெவர்க்குங்காணமறைமுடிவேமன்றத்தி னடனமிடும்வாழ்வே, அண்ணவென்னாகூஷியப்பாவடிமையுன்னையிரந்தேனன் புடனோர்மருந்தெனக்குமருளிச்செய்வாயே. (67)

அணைத்தென்னையுன்னுருவிலென்றனறிவுருவுமகிலமதோடெனதுடலுங்க ரணமுதலின்னுந், துணையானதத்துவம்போய்ச்சகலகேவலம்போய்ச்சுத்தமதாய் ப்பூரணமாய்மௌனமலரணைமே,விணையில்லாத்துரியநடுத்தூங்காமற்றூங்க வின் பசுகவீடெனக்குமின்றளிப்பதுடனே, புணையானவுன்றனதுபங்கயத்தாளென் றன்புன்றலைமேல்வைத்துபின்போர்மருந்தையுமீவாயே. (68)

பொய்யதனையென்னிடத்தேபொருந்தாமலுன்றன்பூரணமாமானந்தசோதி யினிலென்றன்,வெய்யவினையாணவவேர்களைந்துவெந்துபோகவீழ்வேனேபொ ன்னடியில்வித்தகஃவாவெந்தாய், கைதவங்கள்செய்வதனுலொன்றுமில்லையெழு துங்கதைகளையும்பார்ப்பதனற்பயனில்லையரசே, செய்தவத்தாலெப்பொருளுங் கூடுமெனச்சொலினும்சிந்தைவிரும்பியமருந்தையாகூஷியப்பாவருளே. (69)

தப்பாமலெனக்கருளுந்தயையை நினைந்தையாதமியேனுமிதுவரையிலிரு மாப்போடிருந்தேன்,ஒப்பாருமில்லானேயுன்னதருளின்னு முதவாமலிருப்பதனு லென்குறையைக்கொண்டிங், கெப்பாரிலெவ்விடம்போ யாவரிடஞ்சொல்வே னெக்காலுமெனதுசுதந்தரச்செயலொன்றிலையா, லப்பாவாகூஷீசாவுன்சித்தமென் றன்பாக்யமடியேனுக்கருமருந்தையளித்தலுமுன்கடனே. (70)

உனதுகடனென்றென்னையானறியாக்காலத்தொருமையுடனணைத்தென்னை யுண்மையருள்செய்தாய், மனதுமிகச்சஞ்சலமாயலைவதுதானேனோமாதேவாயி

தனையெவரிடம்போ யான்சொல்வேன், கனதையுடையாயுன துபெருங்கருணை தன்னைக்கன்மழுளசிறுவன்யான்காண்பேனுவரசே, நின தருளையின்னுமின்னு மாகூடிசாயீந்தேநிகரில்லாப்பெருமருந்துமளித்திடுவாயரசே. (71)

எனைக்கொண்டுநினைத்தந்தபின்பென் றன்குருவே யெந்தாயேயிகழ்ந்திடலு னின்னதருட்கழகோ, மனைக்கெனவோர்பெண்ணதனைப்பேசி மணஞ்செய்து மற்றுப்பின்குலம்பேசல்மாண்டதன்றேதுரையே, நினைவொன் றுநினையாமனிற் கின் றபெருமைநின்மலனேயென் றனக்குமிப்பிறப்பிலெய்த, நலனுடனேநாயக னேவாகூடியப்பாவரசேநாயேனுக்கோர்மருந்தைநண்ணியளிப்பாயே. (72)

சொல்லமுடியாதவுன் றன்றிருவிளை யாடல்கள் சொல்வதென்றுலனந்த முண்டேசோதியுருவானுய், வல்லவனேநின்னுலொன்ருகாததுண்டோவான வரும்வணங்குகின் றதெய்வமுனீயலலோ, எல்லையிலாப்பெருமையனேயெந்தை யேநீகொடுக்கயேற்பட்டாலுனைத் தடுப்பாரெவருமின்றேயையா, புல்லறிவனெ னக்குனல்லபோதத்தையூட்டிப்புண்ணியனேவாகூடியப்பாபுதுமருந்தையருளே.

அடியார்கள்மனக்கவலையடையாதமுன மேயவர்வேண்டுபரிசிலொன் றுங் குறைவில்லாதருளிப், படியாதாருளந்தனிலேபடிந்திருந்துமரசேபதையாதார் தம்முடையபார்வைக்கெட்டாயே, கொடியேனும்பதைத்திலனென்றேயிகழே லெந் தாய்கோதகற்றியாண்டுகொளல்நின் றனருட்கடனே, படிமீதிற்பாசங்க ளனைத்தினையும்போக்கிப்பாவியெனக்கோர்மருந்தைப்பண்புடனீவாயே (74)

குடிவாழ்க்கையுடையவர்க்கோர்கொடையாளி போலக்குன் றுமலடியவர்க்கு வேண்டுவனதருவோய், படிவாழ்க்கைநிலையதென் றுமூவாசைமூழ்கிப்பட்டதெல் லாம் போதுமெனத்திட்டமிப்போதெனக்குத், திடமாகவுண்டாக்கியிந்திரியகா ணந்தேர்ந்திடினீயன் றறிவுதானேகாணென்று, அடித்தடித்துமக்களுக்குத்தா யூட்டல்போலவாகூடியப்பாவருளியொருமருந்துமெனக்கீவாய். (75)

அடுத்துவந்துவெகுநாளாய்நம்பினின் றவென்னையயலார்போற் பார்த்திருப் பதெவ்விதமோவறியேன், எடுத்துவந்ததேகந்தானிதுவரையிலிருந்ததென்செய லோயிடையிலுற்றகட்டங்களனைத்துந், தடுத்ததுன் றன்செயலல்லோதகவுடையா ய்மிக்கதயவுடையாய்த்தானுகவந்தேவர்க்குமருள்வாய், கொடுத்தனனேயென்னை யுனக்கிதுபொய்யானுலுங்கூறரியபேராகூடியீசமருந்தருள்வாய். (76)

கைம்மாறென்றென் றுமுன்னுதருள்கின்ற காரேகண்ணிருந்துங் குருடன் போல்யானலைதனன்றே, பொய்ம்மாயவுலகுதனைமெய்யாயென்னுளத்திற்பொ ருந்தவைத்தபுதுமைதனைப்போக்கவென்னலாமோ,செய்ம்மாயமியாதோதான்றெ ரிந்திலனேயையாதீராதபழிதன்னைச்சகங்கூறுமுன்னர், எம்மானேயாகூடியப்பா வேழையெனக்கிங்கேயிப்பொழுதேயருமருந்தொன் றீவாயென்னரசே (77)

அருண்மார்க்கமென் றனக்குமா தியினிலளித்தாயதைமறந்துவிளையாட்டுச்சிறு பயல்போல்யானும், மருண்மார்க்கமுடையவரோடேலுற்றுப்பேதைமயக்கமது கொண்டேன்பின்மாற்றவகையறியேன், தெருண்மார்க்கமுடையவுன்றன்திரு வடியார்கூட்டஞ்சேர்ந்தகலாத்திறமுள்ளசித்தமிலனுனேன், பொருளிதுமெய் யென்றுணரப்புண்ணியனேயாக்ஷியீசாவிப்புலையனுக்கிங்கோர்மருந்தை யருளே.

எனக்கருளியிருக்குமுன்றன்பெருமையையான்மறந்ததென்செயலோவுன் செயலோயெனதென்பதாலோ, உனக்கருளுந்தயையென்மேற்பூரணமாயிருந்து முண்மையென்றிங்கதிலமுந்தா துளுத்தகுணமுடையேன், றனக்கெனவேபற்ற தனைக்கண்டுமிகவுழன்றேன்றயவுடனேயாண்டருளல்கின்னதருட்கடனும், மன க்கோணலகற்றிடவேமன்னவனேயாக்ஷியப்பாவோர் மருந்ததனையெனக்குமளித் தருளே. (79)

அடியனைநீயிக்காலங்காவாதேவிட்டாலாதரிப்பாரெவருமில்லை யென்றுனக் குத்தெரியுங், கொடியேனைஎவ்வளவுகுற்றஞ்செய்போதுங்குணமாப்பாராட்டு வதுன்கொள்கையருட்குன்றே, பிடியேனுனைவிடமற்றியாரையுமென்குறை யைப்பேதைகுணமுடையேனிங்கியாவருடன்சொல்வேன்,பொடியாம்வெண்ணீ றுதனைப்பூசாக்ஷியப்பாபுலையனுக்குந்தயவுடனேர்மருந்தளிப்பாயரசே. (80)

பொன்மேனிகின்மேனியென்றுதினம் புகழ்ந்துபோற்றிசெய்துன் பழவடி யார்நாற்றிசையுந்தொழுவார், தொன்மையாய்நீநின்றிருந்துமெவர்க்குந்தோன் றுததுணையாயெவ்வுயிர்க்குமுயிராகிநின்றபொருளே, யென்மேனிக்குளும்புறம் பாயிருந்தாட்டுகின்றவியல்புனதுதிருவருளின்விளையாட்டென்றறியேன், நன் மேனிகொண்டுவருமாக்ஷியப்பாவரசேநாயினுக்கோர்மருந்திந்தனுளேயீவாயே. ()

எங்குநிறைந்தொளிர்கின்றவெந்தைபெருமானேயேழையடியவர்க்குள்ளே யிருந்தெதையுந்தருவோய், கங்குகரையில்லாதாய்கள்வனெனவென்னைக்கடவு ணீயறிந்திருந்துங்கருணைவைத்தாயரசே, பங்கமுளேனதைமறந்துபாழிற்றிரிந் தலைந்தேபாவமிகக்கொண்டனனேபற்றுதுணையில்லேன், அங்கத்தில்மாதினைக் கொண்டருளாக்ஷியப்பாவடியனுக்குமோர்மருந்தையளித்தாளென்துரையே. (82)

பன்னாளுமுன்றனது பதநிழலைநீங்காப்பழவடியாரவர்க்கருளும்பக்ஷமென் மேல்வையா,தின்னாளிலென்கையைவிடவேநீநினையிலெவ்விடம்போயெவரிடத் திலென்குறையைச்சொல்வேன், தின்னுதமருந்துதனைத்தின்றெனைமாய்ப்பே னேதீயதனில்மடிவேனேதெளிகில்லேனெந்தாய், முன்னாளிலாண்டதிறமறவா மாலாக்ஷியப்பாநீமுன்னின்றோர்மருந்தளித்தாளெனையே. (83)

ஒழிவில்லாதுன்றனதுபதநிழலைநினையுமுத்தமர்களவர்வேண்டும்பரிசெல்லா மருளி,அழிவில்லாதென்னாளுமவருளமாலயமாயமர்ந்திருந்தங்கவர்கூட்டமகலாது வாழ்வோய், இழிவுடையேனெவ்விதத்துமறிவில்லேனெதற்குமெந்தாயேயுதவா

னென்றென்னைவிடிலரசே, பழியடைவேனுன்னுடையபாலனன்றோவாகூஷியப் பாவென்பாக்கியமேமருந்தொன்றெற்கருளே. (84)

காப்பதென்றுங்கடனுனக்கென்றெனை யொப்பித்திருந்துங்காதிலொன்றுங் கேளாதார்போலிகழனன்றோ, மூப்படைந்துநடைதளர்ந்துபல்லுமுதிர்ந்தரசே மூடனொருசிறப்புமின்றியிருண்மூழ்கலென்றாற், கோப்பதுடன்வாழ்துமென் னுங்குவலயத்தார்பழிப்போகொஞ்சமலவேயதனையுன்குழந்தையேற்றல்,கூப்பிடு முன்னருளவருமாகூஷீசாவுன்றன் புகழதுதான்குறைத்திமொலோர் மருந்தெற் கருளே. (85)

என்னேயுன்கருணையினலன்றெனையாண்டிருந்துமிப்போதிங்கறியார்போலி ருப்பதுனக்கழகோ, பின்னேயெவ்விடத்திலியாரிடம்போயென்குறையைப்பே தைகுணமுடையவிந்தபேயன்சொல்லியழுவேன், பொன்னேநன்மணிவிளக்கே யெங்குனிறைந்தொன்றாம்பூரணமேயானந்தவாரிதியேவெந்தாய், மன்னேயென் ஞகூஷியப்பாமனமகிழ்ந்திங்கெனக்கோர்மருந்தருளியாண்டுகொள்வாய் மற்றதிலெ ன்குறையே. (86)

ஐயாநீயாதியினிலாண்டருள்செய்திருந்துமறியாதார்போலிந்தவுலகிலெனை விட்டால்,மெய்யாமுன்விளையாடலனைத்தும்பொய்யென்பேன்மேலுமிந்தவுலகது வும்பாழ்பட்டுப்போகும், துய்யாவுன்கருணைக்கிங்கீதுதகவலவேதுரையேயாதலி ஞலென்துர்க்குணங்கள்போக்கிப், பொய்யாதவுன்னுடையபுகழென்றுமோங்கப் புதுமருந்தொன்றாகூஷியப்பாபுலையனெற்கீவாயே. (87)

பொன்னடியைமறவாமையெனையறியாக்காலம்போதனைசெய்திருந்துமதைப் பேதமையால்மறந்தேன், நின்னடியாமெய்ன்னீழல்நீங்கானல்லடியார்நித்தசுத்த பரமசுகநிலையதனில்வாழ்ந்தார், சொன்னடையினிலைநில்லாச்சோம்பலுடைப் பொல்லேன்சோகவுலகச்சூதைச்சுடத்தெரியேனரசே, அன்னையினுமன்புடைப் வாகூஷியப்பாகுருவேயடியனுக்குமருமருந்தொன்றீந்தாண்டுகொள்ளே. (88)

முழுதுமுன்னைக்கண்டவர்கள்மூதறிவாயென்றும்மூடவிருளைத்துறந்துமோ னமலரணைமேற்,பழுதின்றிப்பாசுகத்திற்பகலிரவுகாணுப்பழையவறிஞர்தமிடை க்கலத்தலுறுவேனே, பொழுதுநல்லவகைபோக்கப்புத்தியில்லாநாயேன்புன்புலா ல்வடிவமதைப்பொருளென்றிங்குழன்றேன், தொழுதுன்னைமனமுருகத்தூயவா கூஷியப்பாதோன்றுதநற்றுணையேயொருமருந்தீயாயே. (89)

சொந்தமுளதுணைவர்கள்தந்தையுடன்தாயார்துணிவுள்ளமைந்தருடனல்ல மனையாட்டி, பந்தமுள்ளார்மிகவுனம்மைப்பாதுகாப்பாரென்றேபலநாளுனினைந் திருந்துபாழிலுழைத்தேனே,கந்தபிரான்றனையீன்றகண்ணுதலாய்தேவேகருணை யொடிங்கெனையாளத்திருவுளமுமிலதோ, சந்திரனைச்சடைக்கணிந்தசற்குருவே யாகூஷியப்பாவிவ்வேழைக்குமோர்மருந்தீவாயே. (90)

உனதுபதத்தருளதனினுண்மையறியாதேனுலகதனையுண்மையென்றிங் கலைவுற்றுநின்றேன், எனதுடலம்யானெனவுமெந்தாயேமாந்தேயிணையறியா விடர்க்கடலில்விழுந்தழுவேனரசே, மனத்தினதுவகைமாற்றிமாண்புடனேவுன் றன்மாவாருஞ்சேவடிக்கேமன்னவைப்பாயரசே, பினையொன்றும்வேண்டேனெ ன்ளுக்ஷியப்பாவிந்தபேயனுக்குஞ்சிறந்ததொருமருந்தளிப்பாய்தேவே. (91)

மாதவர்களுனைப்போற்றுமாண்படைந்துநின்றேமன்னியிங்ஙனறியவொண்ணு மாறில்சுகமடைந்தார்; நீதுறுவேனலனில்லேன்றியக்குற்றென்னரசேதித்திக்கு முன்னடியைச்சேரும்வழியறியேன், பேதமிலாப்பெருமையனேபெற்றவனீயல வோபிழைபொறுத்திங்கெனையாளலுன்னதருட்கடனே, சோதியேயென்ளுக்ஷிய ப்பாதோன்ருனற்றுணையேசோம்பேறிப்பயலெனக்குமோர்மருந்தீவாயே. (92)

பாடகில்லேன்பரவகில்லேன்பார்வதியார்பாகாபட்சமிலேனுன்னுடைய பங்கயத்தாளவைக்கே, ஆடகில்லேனற்புதனேநின்னளவிற்பெருமையகங்குழை யநினைந்துநினைந்தரற்றகில்லேனரசே, தேடகில்லேனின்னடியைத்தெளிவில் லேனங்தோதெய்வமேநீகைவிட்டாற்காப்பவரிங்கிலையே, ஆடகச்சீர்மணிக்குன் றேயாக்ஷியப்பாயென்றனருமணியேயுவந்தெனக்கோரருமருந்தீவாயே. (93)

வேறு

அன்றென்முகத்தொடுமுகம்வைத்தணைத்திங்கெனையாண்டவரசே
தின்றென்போதெலாம்போக்கலுன்றிருவருட்குள்ளனற்சும்மதமோ
யின்றென்றன்முனேயேமனுர்தோன்றிலியற்றுவதொன்றிலையே
நன்றுசெய்யாக்ஷியப்பனேநாய்க்குனன்மருந்தொன்றருளாயே. (94)

நாயினிற்கடையேனுன்பதநிழலைநாடுமோர்வகையறிந்திலேன்
பேயினுங்கொடியேன்பித்தரைச்சேர்ந்தேன்பித்தனேனினைச்சேர்ந்திலேன்
தாயினும்பெரியதயவுடையோனேதையலோர்பாகம்வைத்தவனே
சேயினைப்போன்றேன்தெய்வமேயெனக்குந்திருமருந்தொன்றருளாயே. (95)

ஆண்டவனீயேயடிமைனுனென்றுமாயினுமுனைப்பிரிந்ததுண்டோ
வேண்டலனென்றும்வேண்டினேனந்தவிமலமாம்பதந்தனைக்காணப்
பூண்டிலனங்தோநின்றன்வார்கழலைப்பொன்முடியென்றென்முடிக்குத்
துண்டலிற்சோதிதூயவாக்ஷீசாதுயரிலாமருந்தொன்றையருளே. (96)

வேறு

மாதேவாவென்றுமனமகிழ்ந்து நல்லவடியார்மாருதுன்பத நிழலிற்சுகமாக வாழ்வார், மாதேவாவென்றுமலமது நிறைந்தவுடலை மன்னினின்றுமடைய னெனைமண்ணுக்கிக்கொண்டேன், கோதேயுமென்னுடையகுற்றமெல்லாங்குண மாய்க்கொண்டருளினின்னுடையகுரைகழல்கள்காட்டி, சீதேவன்பணிகின்ற வாக்ஷியப்பாவரசேசிறியனுக்குந்திருமருந்தையளித்தருளல்வேண்டும். (97)

வந்தின்றேயான்வேண்டும் வரம்தருவதின்றேல்வார்கழலை நினைந்திடவும் வகையறியேனரசே, நொந்திங்கேபோவதலால்நுண்ணியனேவுன்னைநோற்கவு மோர்திறமில்லாஞெய்யனறிகிலேயோ, சொந்தபயலென்றெனைநீவலியவந்திங் கருளல்சோதியேயுன்பொறுப்பல்லால்வேறுமுண்டோவுரையாய், அந்தநடுவாதி யில்லாவாகூஷியப்பாவெனக்கும்வகையுடனேர்மருந்தளித்துவாழவைப்பாயரசே.

எங்கானின்னடியவர்கள்தூங்காமற்றூங்க வென்னதவஞ்செய்தாரோ புண் ணியர்களறியேன், பாங்கானின்றிருவடிக்கீழ்ப்பதைத்துருகிப்பணியப்பான்மை யுள்ளநெறியொன்றைப்பற்றிலனேயந்தோ, போங்காலம்வருமுன்னேபுண்ணி யாவுன்னடிக்கேபோந்திடுமோர்பெருநெறியையளித்தலுன்றன்கடன்காண், ஓங் காரப்பொருளேயென்ஞகூஷியப்பா வுவந்தேயுத்தமமாமருந்தருளி வாழ்விப்பா யரசே. (99)

வேறு

வாழியெந்தஞகூஷியீசர்வாழிவாழிஞளுமே
வாழியம்மையிளங்கிளித்தாய்வாழிவாழிஞளுமே
வாழிவாழியடியவர்கள்வாழிவாழிஞளுமே
வாழிவாழிநன்மையாவும்வளமுடனிங்கென்றுமே. (100)

---

உ

சிவமயம்

# ஸ்ரீரந்தமாலை

## ஆசிரிய விருத்தம்

அப்பனுநீயாயன்னையுநீயாயான தால்மைந்தனாமென்னை
யொப்புடனிங்கேயுள்ளவா றருளியுத்தமாகாப்பதுன்கடனாஞ்
செப்பிடுந்துன்பமாகியவறுமைசேர்ந்திடா தருள்புரிவாயே
யிப்பொழுதேநீயிறையாகினின் றவெந்தையாக்ஷீசனாந்தேவே. (1)

ஆதரவிங்கேயுனையலாதின்றாலப்பனேயிங்கெனைக்காத்துத்
தீதுறச்செய்யும்வறுமைநோய்தீர்த்துத்தெய்வமேவாண்டுகொள்வாயே
நாதனேநல்லவடியவர்பரவும்நாயகாவளம்பலசூழும்
ஆதினற்றலமாய்வழங்குமச்சிற்றபாக்கம்வாழ்பரமமாந்தேவே. (2)

இட்டமாஞ்சித்தினல்லன்பருக்கருளுமெந்தையேயெம்பெருமானே
கட்டமதுறவேகருத்தினைத்திரிக்குங்காலமதுறாவகைதேவா
வட்டமாசித்தியருளியவாக்ஷியப்பனேயருமைமிக்குள்ளா
யொட்டியவுலகும்வறுமையுநீங்கவுத்தமாவருளிடுவாயே. (3)

ஈகையும்பொருளுநின்னதாயிருக்கவெந்தையேயெவரிடஞ்செல்வேன்
நாகணிச்செல்வாநாயினேன்சாரும்நலமிலாக்கவலைகடீர்த்து
யோகமேபுரியும்போகமேயுதவியுத்தமாவடியனேற்கருள
லாகமமருளுமாக்ஷியப்பாநின்னருங்கடனாகுமிங்கன்றே. (4)

உன்னதுகடமையுற்றமைந்தரையிங்கோர்குறையுமுறாவண்ணம்
பொன்னுடன்வேண்டுமவையெலாந்தந்தேபொருந்தியவாசையைநீக்கி
யுன்னடிசேர்த்தலாதலாலெனையுமுத்தமாவண்டுகொண்டருள்வா
யன்னையாமிளமைக்கிள்ளைபாகத்தாயாக்ஷியீசாவென்றனரசே. (5)

ஊருடன்பேருமனந்தமேயாகியொன்றுமிங்கில்லதாய்நின்றாய்
சீருடன்றிருவுமோங்கியநகருந்திருவடியார்களுமாகப்
பாருடன்சோமசூர்யருள்ளளவும்பழிப்பிலச்சிறுபாக்கத்தை
யோருதற்கரியவாக்ஷியப்பாநீயுவந்துமேசெய்தருளாயே. (6)

எண்ணனின்னெண்ணமாகவுமெந்தாயியற்றவுமுன்பணியேனான்
புண்ணியமொன்றுஞ்செய்திலேனெனினும்புண்ணியாவுன்னடிபோற்ற
வெண்ணினேனின்றேயாதலினெந்தாயிறைவனேநின்மாட்டுள்ள
தண்ணளிசெலுத்தியாண்டருள்வாய்நீதயவுளவாக்ஷியப்பாவே. (7)

ஏதுமேயறியாயிளேனுனென் றனக்கெவ்வறுமையுமீங்குருதாளல்
சோதியேயுன் றன் றூயநல்லருளின்சுபாவமாங்கடமையென்றோர்ந்தேன்
நீதியாயன்பர்க்குதவுனற்செல்வம்நீண்டமாளிகையுனீ தந்தே
வாதியேயென்னையாண்டிடல்வேண்டுமோக்ஷியப்பாவென் றனரசே. (8)

ஐவகைப்புலனின்வழிபுகாதென் றன்மனமதையடக்கியேயாண்டு
பொய்வகையானசமயமாங்குழியிற்புக்கிடாதருளினுற்றடுத்துச்
செய்வகைதெரிந்தேயுன்னையுமுன் றனடியவர்குழாத்தையுஞ்சேர்ந்தே
யுய்வகையருளாயுத்தமாவாக்ஷியீசனேவொப்பிலாத்தேவே. (9)

ஒப்புரவொழுகும்நீதியேயறியாவொதியனேனெனினுமிங்கெந்தாய்
செப்பவொண்ணுதவறுமையுனேயுஞ்சேர்ந்திடாதுன்பணியோடிங்
கொப்பிலாவுன் றனடியனுனென்றேயுலகுளோரொப்பிடுமோறே
யப்பனேசாக்ஷியொன் றினைநல்காயாக்ஷியீசாவென் றனரசே (10)

ஓதுசாத்திரங்களுணர்ந்திலேனெனினுமுணர்ந்தவர்தம்மையிங்கடுத்துப்
போதுபோக்குதற்கும்புண்ணியஞ்செய்யாப்புலையனேனென்னினுமந்தோ
கோதெலாம்போக்கிக்குணமதையளித்துன்குலவருட்கழலிணை தன்னை
யாதரவாகநல்கிடலெனக்குவாக்ஷியப்பாவுன் றன்கடனே. (11)

ஔவியமில்லாவடியர்வாழ்சங்கமருளானந்தப்பேரோ
டெவ்வகையேனுமெந்தையேயெளியேன்வாழுமிச்சிறுபாக்கத்தி
லெவ்வமில்லாதேயிருக்கவுமுன் றனிருங்கருணை தனைநோக்கு
மவ்வகையடியர்சூழவுநல்காயாக்ஷியப்பாவென் றனரசே. (12)

கற்பவைகற்றுக்கேட்பனகேட்டுக்கருத்துளேநன்னடைதெரிந்து
நற்பலபெரியோர்பூசனைபுரிந்துநாளுமேவாழ்வதிங்கறியேன்,
சொற்பலவகையாய்த்திரியுஞ்சித்தத்தைச்சோதியேயடக்கிநீயாண்டோ
ரற்புதம்விளக்கியருளலுன்கடனுமாக்ஷியப்பாவென் றனரசே. (13)

காப்பதுவிரதமதுவுமுன்கழற்கேகழிபெருங்காதலேகொள்ளல்
மூப்பதிங்கடையுமுன்னமேயடைதல்முழுதுணர்ந்தோர்கடஞ்செய்கை
கோப்பிதுவேயென்றிங்குயான்கற்றுங்குறகிலேனின்னடியந்தோ
தீப்புகுகில்லேன்தீனனேனுக்ஷியப்பனேயாண்டுகொண்டருளே. (14)

கிருமிவாழிடத்தைத்தேகமாய்க்கொண்டுங்கிளேசரேவாதரவென்றுங்
கருமிநானெனதிங்கென்றுமேயென்றுங்காலத்தைவீணினிற்போக்கிப்
பெருமிதமுடையநின்னடிப்புணையைப்பெற்றிடாதாழ்ந்தனனரசே
யுருவிலியெரித்தாயாக்ஷியப்பாவாண்டுயெவருள்புரியாய்தேவே. (15)

கீழினந்தன்னைச்சார்ந்திடாவாறுங்கேடுகளுற்றிடாவாறு
மாழிபோல்பந்தத்தழுந்திடாவாறுமையவச்சிறுபாக்கத்தில்

வாழிளங்கிள்ளைபாகனேவருளானந்தமாஞ்சபையினையருளாய்
காழியர்நாதன்காதலாய்ப்பாவுங்கருணையையுடையநற்றேவே. (16)

குணமொன்றுமில்லாக்கொடியனேனெனினுங்கொலைமுதற்பஞ்சபாதகங்கள்
கணமேனுநீங்காக்கருத்தனேனெனினுங்கத்தனேகருணையோடென்னை
யுணவுறச்செய்தேயுத்தமாநாவுக்கரசினையாண்டதேபோலத்
துணையிலேன்றுரையேயாண்டிடல்வேண்டுமாக்ஷியப்பாவென்றனரசே. (17)

கூடுதற்பிரிதலில்லனுயெங்குங்கோத்தநின்றவென்றேவே
கூடவேனின்னைக்குணமிலேனெனினுங்குறைகழலுடையவென்னிறையே
தேடுதற்கரியாய்திருவெண்ணெய்நல்லூர்ச்சுந்தரராண்டவத்திறம்போ
லாடுபூங்கழலாயென்னையுமாள்வாயாக்ஷியப்பாவென்றனரசே. (18)

கெடுவதுசெய்யின்விடுவதுகருமமாதலினின்கிளைஞர்க்கே
யடுவதாம்பணியைச்செய்திலனென்றேயையனேகையைநீவிட்டாற்
படுவதெல்லாமிங்கல்லலேகண்டாய்ப்பணியவுன்மலர்ப்பதங்காட்டி
நடுவனிங்கடையாவண்ணமாளாக்ஷியப்பனேவென்றனுயகமே. (19)

கேட்டினிலுறுதிகூட்டுமுடைமையென்பதைக்கடைப்பிடித்தொழுகி
யாட்டுமொருடியரியதுன்பிலுமுன்னடியகழல்பிடித்திருந்தார்
பாட்டுவித்தவரைப்பார்வதிபாகாபரமனேயுள்ளனீமகிழ்ந்தாய்
கூட்டவேயென்னையடியர்தம்மோடிங்குறுவையோவாக்ஷியப்பாவே. (20)

கைப்பொருடன்னின்மெய்ப்பொருள்கல்வியென்றுயான்கற்றதிங்குண்டு
கைப்பொருளோடுமெய்ப்பொருளும்யான்கசடறப்பெற்றேனில்லை
யப்பனேயதனுலடியனேன்சிறியனுகினேனடியவர்கூட்ட
மிட்பொழுதேயெனைச்சேர்த்துநீயாள்வாயிறைவனேயாக்ஷியீஸ்வரனே. (21)

கொடுப்பவனீயாயிருக்கவுமெந்தாயெளியனேன்கொடியதாம்வறுமை
யடுக்கவுனேயால்மெலியவுமுறுதலையனேநின்றனக்கழகோ
தொடுப்பதேவழக்காமுலகினைத்தொடராதடியனேன்நின்கழன்மலராம்
படுக்கையிற்றூங்கும்பான்மையிங்கருளாய்பரமனேவாக்ஷியப்பாவே. (22)

கோட்டமில்லருளேகுலாவுனின்கழலைக்குறுகியபெருந்திருவடியர்
கூட்டமேமருவியவர்கடம்புகழைக்கோதறப்பாடியிங்காடும்
நாட்டமெற்கருளிநாயகாவென்னைஞானமேயடைந்திடச்செய்யாய்
வாட்டமதடையாவண்ணமாக்ஷீசாவள்ளனீயல்லவோவெந்தாய். (23)

கௌவைச்சொல்லினெவ்வருக்கும்பகையென்னவேகற்றியானிருந்துங்
கௌவையேபேசிக்காலத்தைவீணிற்கழித்தனன்முனிந்திடேலரசே
யெவ்விடத்தும்முன்னிணையடிபணிதலென்பணியாக்வேயெந்தாய்
செவ்விதாயருளச்சிற்றபாக்கத்தெஞ்செல்வமேசிவபெருமானே (24)

சந்ததிக்கழுவந்திசெய்யாமையாதலிற்சாமியுன்னருளாஞ்
சந்ததியிங்குவாழவேயருளானந்தமாஞ்சபையொன்றருளி
எந்தையேயெவரும்நின்னடிவழுத்தியிருஞ்சமுசாரமிங்கென்னும்
பந்தமேதொலையப்பரமனேயாக்ஷியப்பனேபார்த்தருள்வாயே. (25)

சான்றோரென்கையீன்றோர்க்கழகெனும்சான்றசொல்நினைத்திங்குபார்க்கில்
ஈன்றவனீயாயிருத்தவினாலேயெந்தையேயெமக்கருணல்கித்
தோன்றாத்துணையாயிருந்துமேயெம்முலகத்ததாந்தொடர்ச்சியைநீக்கி
யான்றவாவாளல்நின்னருட்கடனேவாக்ஷியப்பாவென்றனரசே. (26)

சித்திரத்தெழுதும்பாவைபோலுன்றன்றிருவடிதொழுவதேதொழிலாய்க்
கத்துதலகற்றிமுப்புடிநீக்கிக்கடவுளேகாதலாயுருகும்
நித்தியவடியரருட்குழாம்நடுவில்நின்னருட்பதனிழல்நீங்கா
தத்தனையருள்வாயாக்ஷியப்பாவென்னரியதோர்துணையாவானே. (27)

சீர்கெட்டமாதர்மயக்கத்திலாழ்ந்துசீரெலாங்குறைந்தனனந்தோ
போர்புரிமனத்தாற்பொன்றினேனென்றேபுகலலாமையனேயரசே
சார்கிலேனடியர்தம்முடையடியைச்சாரவேயுன்றனதடியை
யோர்கிலேனாக்ஷியப்பனேவெந்தாயுத்தமாயின்றருள்புரியே. (28)

சுகமெனமாதர்கலவியைநினைந்துசோர்விலாதவர்கள்பாற்சென்று
பகலுடனிரவும்மற்றவரல்குற்பாம்பினாற்கடியுண்டிங்ஙன்
அகமதுசோரவழிந்தனனந்தோவாதரவொன்றிலேன்றன்னை
புகழ்பெறவடியர்கூட்டமேசேர்ப்பாய் பொதுநடத்தாக்ஷியப்பாவே. (29)

சூதுசெய்மாதருறவினைப்பற்றிச்சூழ்ந்தனன்றீவினையெல்லாம்
வாதுகள்செய்தும்வசைகள்பேசியும்யான்வாழ்ந்தனன்காலமிங்கெல்லாம்
ஆதலாலாக்ஷியப்பனேவடியேனடியவர்பணியதுதேற
நீதியாலென்னையாண்டருள்செய்தல்நின்னருட்கடனிங்காமே. (30)

செய்தவமறந்தாற்கைதவமாளுமென்றென்றுசெப்பியேநல்லோர்
பொய்தவமறந்துபுண்ணியாவுன்றன்பொன்னடிதன்னையேநினைந்து
மெய்தவஞ்செய்தார்மேதையராகிமெய்யனேபேதையேனிங்ஙன்
கைதவமறந்தேனாக்ஷியப்பாநீகருணைசெய்தாளவுன்கடனே. (31)

சேரிடமறிந்துசேரவுமறியேன்திருவடியார்தமைக்குறியேன்
பாரினில்வீணாய்ப்பற்பலநினைவாய்ப்பலரொடும்பாவியேன்றிரிந்தேன்
காரியமறியேன்களைகணொன்றில்லேன்கர்த்தனேவாக்ஷியப்பாவுன்
சீரியவடியாரோடெனைப்பொருத்திச்சேர்த்திடாய்நின்னடிதனக்கே. (32)

சையெனத்திரியேலென்னும்வாக்கியத்தின்றத்துவமேதெனவடி
யையவிவ்வுலகைமெய்யெனநம்பியாழ்வதையகற்றலென்றறியேன்

னையுளமில்லேன்பொய்யனாய்த்திரிந்தேன்நாதனேவாக்ஷியப்பாநீ
மெய்யருள்புரிந்திங்கென்னையாண்டிடுதல்மேவுநின்னருட்கடனாமே. (33)

சொற்பலபொருளாய்த்தோற்றிடுமுலகிற்சோர்விலாதிருக்கயானறியேன்
அற்பமுமென்னாற்றுயர்படமுடியாதகிலமீதென்னையாட்டாதே
நற்பரம்பொருளேநற்குணமுள்ளவடியவர்தமக்குநல்லமுதே
தற்பராவாக்ஷியப்பனேவருளாய்தயவுடனிவ்வெளியனேற்கே. (34)

சோம்பரென்பவர்கள்சுணங்கன்போற்றிரிந்துசொன்னசொற்படிநடவார்தார்
ஆம்பலநூல்கள்கற்றுமிங்கென்னவநேகமாந்தர்க்கமிட்டென்ன
ஓம்பரசிவமேயென்றுனைப்போற்றிவுன்னருட்சொற்படிக்கில்லேன்
தேம்பியேதிரியாவண்ணநீயாள்வாய்தெய்வமேவாக்ஷியப்பாவே. (35)

சௌந்தரபாண்டியமன்னனாய்வந்துதாரணிதன்னைமேம்படுத்தி
சௌந்தரமங்கையிளங்கிளித்தாயொருபாகமாய்மனமகிழ்வானே
சௌந்தரமென்றேமலனிறைபாண்டந்தன்னையானோம்பியேயழிந்தேன்
சௌந்தரமானநின்கழற்சேருஞ்சார்பினைச்சாற்றுவாயரசே. (36)

ஞானமேவடிவாய்த்தேடுவார்தேடுனாட்டமேநாட்டத்துட்பொருளே
வானமாய்மழையாய்வழங்கிவானுலகைவாழ்விக்கும்கருணைவான்றேவே
தேனமர்சோலைத்தென்பெருந்துறையாய்தீவண்ணமாகிநின்றானே
ஆனவின்னருளீந்தாக்ஷியப்பாவிவ்வடியனையாண்டருள்வாயே. (37)

ஞேயமிங்கில்லேனின்னடிதனக்கேநித்தியாதத்துவப்பொருளே
ஞாயமாயுன்னைவழுத்துநல்லடியர்நாதனேபலர்தாமிருக்கக்
காயமேயானென்றிருக்குமென்னைக்காதலிக்கவேண்டிலதுனக்கெனினும்
சேயுனக்கன்றோவாக்ஷியப்பாவுன்சீர்கழற்சேர்த்தருள்வாயே. (38)

தக்கதோரன்பும்பொறுமையுமில்லேன்றயையுடன்சாந்தமுமில்லேன்
மிக்கவாவறுத்தலென்பதுமில்லேன்மேன்மக்கணடைசற்றுமில்லேன்
மக்களைத்துணையாய்நம்பியாழென்னைமாதிளங்கிள்ளைதன்பாகா
துக்கமதாற்றித்தூயனாய்ச்செய்தல்துணைவனேநின்னருட்கடனே. (39;

தாமதகுணத்தானின்னடியார்கள்தங்களின்பெருமையையறியேன்
சேமமேமிகுந்தவருளினைமறந்துதிகைத்துநானிற்கிறேனந்தோ
நேமமொன்றில்லேன்நின்னருள்பெறவேநினைந்தைவாடுமென்றனக்கு
நாமவஞ்செழுத்தைநல்கிடாயாக்ஷியப்பனேநலம்பெறனானே. (40)

திக்குகடோறுஞ்சென்றுனையறிந்தசெல்வரைச்சேர்ந்திலேனந்தோ
அக்குமாமணியைமாலையாக்கொண்டவையனேவாக்ஷியப்பாவே
சொக்கியுன்பதத்திற்சுகமடைந்தாழச்சோதியேநினைந்தனன்கண்டாய்
புக்கிடமில்லேன்போதனேயென்னையாளல்நின்னருட்பெருங்கடனே. (41)

தீதெலாமொன்ருய்த்திரண்டொருவடிவாய்த்தேகமேயானெனவுழன்று
மாதர்களுறவைமெய்யெனநம்பிவாழ்ந்திடுமோமடப்பையல்
ஓதவுமறியேனுய்வகையறியேனென்றுமேயறிந்திடேனந்தோ
காதலாயுன்னையடுத்தனனக்ஷியப்பனேகருணைவைத்தாளே. (42)

துன்மார்க்கநெறியேவீடெனநினைந்துதொல்லிருண்மூழ்கினனதனுற்
சன்மார்க்கமறியேன்சாதனமில்லேன்சாகவேவாழ்ந்திடுகின்றேன்
பன்மார்க்கநூலும்பார்த்திலேன்பரமாவுன்னருட்பாதமேதுணைகாண்
நன்மார்க்கமருளிநாதவாக்ஷீசாநாயேனையாண்டுகொள்வாயே. (43)

தூக்கமுஞ்சோம்பலுந்துர்க்குணம்யாவுந்தோன்றிடுமென்னிடந்தனிலே
போக்குடன்வரத்தாய்ப்புலன்வழிதிரிந்தேன்பொய்யனேன்போம்வழியறியேன்
நோக்கினின்னருளைத்தேடிடுமடியார்நோக்குமுன்பூரணவருளைத்
தாக்குனல்லாக்ஷியப்பனேயெளியேன்தயங்கிடாதாண்டருளரசே. (44)

தெய்வமேநீபொன்பணியாதாம்போலத்தேறிடிற்கலந்திங்குநிற்பாய்
உய்வகையறியார்சமயங்கடன்னுலுன்னையும்பழிப்பரேயந்தோ
செய்வகைதேரார்தம்மொடுஞ்சேராவகையெனக்கருளியேயீசா
மெய்தவமருளாய்மேவினேனடியைமெய்யனேவாக்ஷியப்பாவே. (45)

தேரிடாமனமுந்தொழிலும்வெவ்வேருய்த்திரிவதுந்திகைப்பதுமாகி
நாரியர்தம்பால்மயங்கியேநின்றுநற்றவந்தன்னையானமறந்தேன்
பாரினிலுன்றன்பழவடியார்தம்பணிதனைச்செய்யவேயுமையாள்
சேரிடப்பாகாசெய்தருள்வாயேசீரியவாக்ஷியப்பாவே. (46)

தையலார்மயலிற்றளர்ந்துநான்றிரிந்துதக்கனின்னுமைமுமறந்து
செய்யுமுன்பணிகளதம்மையுமறந்துதிருவடியாரையுமறந்தேன்
உய்வகையுண்டோயுத்தமாவாக்ஷியீசனேவொப்பிலாப்பொருளே
ஐயங்கள்போக்கியாள்வதுன்கடன்காணச்சிறுபாக்கத்தமர்ந்தோய். (47)

தொல்லைதொல்லையென்றுலகவர்சொல்லுஞ்சொற்களைச்சொல்லியேதிரிவேன்
நல்லதுதன்னைநாடிலேனுனுன்மைந்தரிலொருவனிங்கன்றே
வல்லநின்னடியர்வாழவேவாரருளானந்தமாஞ்சபையினையெல்லாம்
வல்லவாக்ஷீசாவகையுடனருளாய்வீணையிலேன்வாழிடத்தானே. (48)

தோற்பனதொடரேலெனுமொழியறியேன்சூதினர்தம்மொடுந்திரிந்தேன்
நாற்பதார்த்தத்தில் நாயினேனென்றும்நண்ணிலேனென்செய்வனந்தோ
நோற்கவுஞேன்பின்னுண்மையையறியேன்நுவலுமெத்திறமுனனில்லேன்
வேற்படையானையீன்றவாக்ஷீசாவேண்டுமோறிங்குநீயருளே. (49)

தௌதமால்வரையாய்தக்கனின்னடியைச்சார்ந்துளபெரியவரிடத்தே
ஔவியமேதுமில்லனுய்வாழ்ந்துன்னடிதனைச்சாரவேநினைந்தேன்

கௌவியமலத்தைப்போக்கியுன்கருணைக்கடலிடைச்சேர்த்திடுவாயே
தௌவவில்லாவாக்ஷீசனேயெந்தாய்தமியனேனன்னெறியுறவே. (50)

நல்லவர்தீயரெனவறிநாட்டம்நாதனேயினந்தெரிகில்லேன்
சொல்லியசுருதிமுடிவறிந்தனைத்திறசாக்ஷியாமுனையறிகில்லேன்
தொல்லையாம்வினையைப்போக்குவதற்கோர்சூக்ஷியுந்தோன்றிற்றில்லை
தில்லைவாழரசேயாக்ஷியப்பாநீசெய்வகைதெரித்திடுவாயே. (51)

நால்வர்க்கன்றறத்தைநன்றாய்விளக்கநாதனேகுருவுருக்கொண்டாய்
மால்முதற்றேவரெட்டுதற்கரியாய்மலமதைத்தள்ளியவன்பர்
பால்வரப்பரமாற்புதமதாய்க்கொண்டிடும்பான்மையைப்போலவேயின்றும்
சால்பெருமருளேகோலமாய்க்கொள்ளிற்சங்கடமென்னவாக்ஷீசா. (52)

நித்தனின்னடியைப்பழவடியார்கள்நித்தமும்போற்றிப்பணிந்து
பத்தியாய்த்தங்கள்பழவினையறுத்துப்பாரினின்னருட்பதம்பெற்று
மெத்தவனல்லசிற்சுகமடைந்தார்மேவினேனுலகினையானும்
அத்தனேயீதிங்காக்ஷியப்பாவுன்னருளினுக்கழகதுவாமே. (53)

நீதியாலன்பர்நித்தமுஞ்சுத்தனின்மலமார்க்கமேபரவிப்
பாதியாய்ப்பரையைப்பாகமாய்க்கொண்டாய்பதநிழலடைந்தனரிங்கே
பேதமேபேசிப்பேயனேனுலகைப்பேணினேனீதுமென்விதியே
நாதனேவாக்ஷியப்பனேயெற்குனல்லருள்புரிந்திடுவாயே. (54)

நுண்ணியவுன்னைநுணுக்கரிதென்றேநூலினுல்மறைவலார்சாற்றப்
பண்ணியபாவம்பழமறைதனக்கும்பார்க்கவொண்ணமைலேநின்றாய்
நண்ணவுமுன்னைநச்சினேனரசேநாயினேன்கருத்தின்வண்ணம்
பண்ணுவாயாக்ஷியப்பனேபாரிலற்புதமாகவேயின்றே. (55)

நூல்பலதெரிந்தும்சீலமின்றாகில்நுட்பமதிழந்தவராவர்
கால்வழிவாராவறிவினராகிற்கண்டிடாருன்னையிங்கரசே
மேல்வழியறிந்தவன்பர்பாலென்னைமேவவேவிடுத்தென்றனரசே
வேல்கொளுவோனையீன்றவாக்ஷீசாவிமலமாம்பதத்தையீவாயே. (56)

நெறியலாநெறியைநினையவுமாட்டார்நினைப்பவர்தம்மொடுங்கூடார்
அறிவிலாராகிப்பிரிந்தென்றுநில்லாரன்பரைப்பிரியவுமாட்டார்
குறியலாக்குறியைக்குறிக்கவுமாட்டார்கோதிலாவருளையுநீங்கார்
அறிவிலிக்கன்னார்கூட்டமிங்கருளாயாக்ஷியப்பாவென்றனரசே. (57)

நேற்றுளாரின்றுமாண்டிடுமதனைநினைவினில்வைத்திடாப்பாவி
சோற்றினையுண்டுதூங்கியேவிழித்துச்சோம்பலையடைந்திடும்பாவி
ஏற்றமாய்த்தாழ்வாய்த்தினந்தினஞ்சித்தமிழுத்திடவதன்பின்றொற்றிரிந்து
காற்றுபோலலையாதாக்ஷியப்பாநீகடைக்கண்பார்த்தாண்டருள்வாயே. (58)

னையவேநானென்னுளுமிங்கலையவும்நானெனமுந்திவன்மனமும்
பொய்யினைமெய்யாய்ப்புதுக்கியேயென் றன்போதத்தைத்தூறுசெய்திடுமால்
செய்யவுன்மலர்த்தாள்மறந்திடச்செய்யுஞ்சித்தத்தின்மலமதையகற்றி
ஐயனேவாக்ஷியப்பனேயென்னையாளுதனின்னருட்கடனே. (59)

நொய்யதாமுலக்வாழ்வினைநிலையாய்நோக்கிநல்லருட்செயன்மறந்து
பொய்யதாமுடலைமெய்யெனநினைத்துப்போகபோக்கியங்களெனதென்
றையமில்லாதுமயக்கமேசுகமென் றறிவிலாப்பாவிநானலையா
தையனேவாக்ஷியப்பனேயென்னையாளுதனின்னருட்கடனே. (60)

நோயதாம்பிறப்புமிறப்புமில்வாழ்வைநோக்குநற்பழவடியார்பாற்
போயுயும்வாழ்வேபெரிதெனநினைக்கும்போதமேயருள்புரிந்திட்டுச்
சேயினையன்னைகாப்பதுபோலென்செல்வமேயென்னைநீகாத்துப்
பேயினேனுன் றன்கழல்புகவாக்ஷியப்பனேபெரிதருள்வாயே. (61)

நௌவியேயென்னைநானிலம்பழிக்காதாளுவாய்நாதனேயரசே
அவ்வுடனுவ்வுமவ்வுமாய்நின் றவுன்னற்புதப்பேரருள்காட்டிக்
கௌவையில்லெந்தாய்கற்பனைபோக்கியுன்கழலடியடைவழிதெரித்துச்
செவ்வையாயாக்ஷியப்பனேயீதுன்சீரருட்போழகாமே. (62)

பழிப்பிலாவாழ்வேபெரிதெனநினைக்கும்பழவடியார்கடம்மனத்திற்
கொழிக்குநல்லருளேகோலமாய்க்கொண்டகுணப்பெருங்கடலெனநிற்போய்
வழிப்படாதென்னைமனமதின்வசமாய்விட்டுநீவாட்டுதலழகோ
செழிப்புடனோங்குமச்சிறுபாக்கஞ்சீருடன்வாழ்ந்தருள்வாயே. (63)
பாசமுன்பாதம்பரவுநல்லடியார்பாற்செலும்பான்மையதாக
நேசமும்மவர்தம்நேர்பணிசெய்யநினைத்திடும்தன்மையதாகக்
கோசமாமைந்தைக்கோதறப்பார்த்துநானவையல்லவென்றுரக
வாசமேலோங்குமச்சிறுபாக்கவாசனேயருள்புரிவாயே. (64)

பிழையிலாதுன் றன்பேரருளடியார்பெருமையைச்சொல்லவிங்கெளிதோ
பழையசீதார்பெரியபுராணங்கள்பார்க்குங்காலையிற்பக்திதான்றோன்றித்
தழைதினுமறிபோற்பின்னும்யானிந்தத்தரணியிலலைந்திடலழகோ
மழவிடையாக்ஷியப்பனேயருளில்மறிப்பாராருன்னையென்னரசே. (65)

பீடியலருளாற்பிறப்பிறப்பகற்றிப்பேதமையகற்றுமெய்யடியார்
தேடிடுந்தேவேதிருவருட்செல்வாசிவபெருங்கருணையேயெந்தாய்.
நாடிநானுன் றனடியவர்நடுவுணல்லருள்பெற்றுவாழ்ந்திடவே
ஆடியபாதாவாக்ஷியப்பாவெற்கருள்செயலுன்னதுகடனே. (66)
புனிதநல்லடியார்புகழ்தனைப்பேசப்போதுதானில்லையேயையா
மனிதனுய்ப்பிறந்துமுலகினில்வேதவாகம்விதிப்படிகடக்கு

மினியவனல்லேனேழையேனுனேனெத்தவங்களையும்யானியற்றேன்
தனியனேயாகூஷிபீசவெற்கருளிற்றடுப்பவராருன்னையரசே. (67)
பூதநாயகனேயெவ்வுலகத்துமெவ்வுயிர்தனக்குமங்குயிராய்
வேதநாயகனுய்வேதத்தினுச்சிவீற்றிருந்தருணடஞ்செய்யும்
சோதிநயகனுயடியவருளத்திற்சோர்விலாதென்றும்வாழ்ந்தருளும்
ஆதிநாயகனேயாகூஷியப்பாநீயருளிடிற்றடுப்பவருண்டோ. (68)
பெண்ணிளங்கிளியாள்பாகமதென்றும்பிரிந்திடாதருளுருவோங்கிக்
கண்ணகனிலத்திலுள்ளன்பருளமேகாதலாயாலயமெனவாழ்
அண்ணலேயரசேயத்தனேதில்லையம்பலத்தாடுமெம்மமுதே
புண்ணியாவுன்னைப்போற்றினேனென்றும்மறந்திடாதருள்புரிவாயே. (69)
பேணுநல்லடியார்பாலதாய்நாளும்பேரருட்குடிகொண்டபரனே
நாணுதலில்லாநங்கையர்தம்பாலுட்டமாய்மயங்குதனன்றே
வேணுகோபாலன்வேதனுங்காணுவிமலனேயென்வினையகற்றித்
தாணுவேயாகூஷியப்பவெற்கருளிற்றடுப்பவராருன்னையரசே. (70)
பையலாய்ப்பிறந்தும்பிறப்பிறப்பகற்றும்பழவடியார்களைப்பணியேன்
தையலாருறவேபெரிதெனநம்பித்தரணியிலாழ்ந்திடும்பாவி
பொய்யிலாருறவும்புண்ணியர்பணியும்பொருந்தியேவாழ்ந்திடவெளியேற்
கையனேவாகூஷியப்பனேயருளிலாருன்னைத்தடுப்பவரரசே. (71)
பொய்தனைப்போக்கும்புண்ணியருறவும்புலைகொலைகளவிலாரருளும்
பையலெற்கருளிப்பவந்தனைப்போக்கிப்பரகதிகொடுப்பதென்னுளோ
தையலுயகியாமிளங்கிளிப்பரையைத்தன்னிடப்பாகமாய்ப்பேணு
மையனேயாகூஷியப்பனேயறையாதரவேதுமில்லெனக்கே. (72)
போகமேவேண்டிப்புகழினைநினைந்துப்பொய்ப்பொருடன்னையேபொருந்தித்
தேகமேநானுய்த்திரிந்தழுதிங்கேதெளிவிலேனுகியேநின்றேன்
சோகமேபோக்கிச்சோதியேயுன்றன்சுகவருட்பதநிழற்சேரும்
யோகமேயருளாயாகூஷியப்பாவிப்புலையனேன்றன்னையுமாண்டே. (73)
பௌவநீர்த்திரைபோல்வந்திடுஞ்சனனமரணமாந்துன்பமேபோக்கக்
கௌவியமலத்தின்பலத்தினுற்கருதேன்கடையனேனேன்பிறந்தேனே
ஔவியமில்லாவருளினையளித்தெனையாண்டிடல்நின்னருட்கடனே
செவ்வியமலர்த்தாள்சேரலென்றுகூஷியீசனேசெப்பிடுவாயே. (74)
மயக்கமதகற்றுஞ்சான்றநின்னடியர்மருவிடுமலர்ப்பதந்தன்னைத்
தியக்கமொன்றின்றித்தீர்த்தமாட்டித்தேனிரம்பியமலர்களைச்சாற்றிச்
செயக்கடவேனுசெவ்வியபூசையென்செல்வமேசிவபெருமானே
உயக்கருணைகாட்டாகூஷியப்பாவிவ்வுழைப்பிலேற்குந்தயைவைத்தே. (75)

மாதர்கடங்கள்மயக்கினிலாழ்ந்தேயுளமதியனைத்தையும்போக்கிச்
சாதுபோல்நடித்துச்சற்சனருறவைப்பற்றிலேன்சாந்தமொன்றில்லேன்
போதினைவீணேபோக்கினானலைதல்புனிதனின்னருளினுக்கழகோ
மாதொருபாகாவாக்ஷியப்பாயிம்மதியிலேற்கருள்புரியாயே. (76)

மிகுந்தவல்வினையேவளர்த்திடுமாதர்வெய்யகாமத்தினிளும்
புகுந்துநானழுந்திப்புலன்களானுகரும்போகமேமெய்யெனநம்பிச்
சுகந்தனையிழந்துசோம்பனாய்த்திரிதல்சோதியேநின்னருட்கழகோ
தகுந்தநல்லடியார்க்கருளுமாக்ஷீசாதமியனுக்கும்மருள்தருவாய். (77)

மீகாமனில்லாமரக்கமோடாதெனவௌவையருளியதேபோற்
றேகாபிமானமுதல்விவகாரத்திசைவரைத்திருவருளின்றி
யாகாதிங்குண்மையறியவென்றெவருமறிவதும்நின்னருளேகாண்
போகாபிமானம்போகநீயருளாய்புனிதனேயாக்ஷியப்பாவே. (78)

மும்மலச்சேற்றினுளுமேயழுந்திமூத்தவர்சொல்லையுமறியா
திம்மையைவீணிற்றிரிந்தொழித்ததலாவியற்றியநலமொன்றுமில்லை
பொய்ம்மையிலாழ்ந்துபுலையனாதற்புனிதனேநின்னருட்கழகோ
மெய்ம்மையேயருள்வாய்மேலவர்போற்றும்மெய்யனேயாக்ஷியப்பாவே. (79)

மூர்த்தியேநீமுன்மொழிந்தவேதத்தின்மொழியையுங்குறியேன்குறித்துப்
பார்த்தவர்சொல்லுஞ்சொல்லையுங்குறியேன்பரமனேபழவடியார்கள்
கீர்த்தியுங்குறியேனாயினுமிளமைக்கிள்ளையைப்பாகமாய்க்கொண்டாய்
சேர்த்தருள்வாயேதெய்வமேயுன்றன்சேவடிதனக்கிங்கெனையே. (80)

மெய்யினைநீங்காவடியவர்வாழ்வேவேதத்தினுச்சியினடிக்கு
மையனேவரசேயருட்பெருங்கடலேயத்தனேமாலயன்காணாச்
செய்யமேனியனேசெய்வகையறியேன்றிருவருட்செயலையுமறியேன்
பொய்யனாயாகாதென்வினைபோக்கிப்புண்ணியாவாண்டருள்வாயே. (81)

மேலானவுன்றனடியார்கடங்கள்மேன்மையையென்னாளும்பரவி
கோலாகவோர்கால்கொள்ளாதமுன்னுன்கோயில்களனைத்தையுஞ்சூழ்ந்து
சீலாவுன்னருளைச்சேர்ந்தனனல்லேன்சிறியனேன்பிழைதனைப்பொறுத்தே
வாலாலமுண்டவாக்ஷியப்பாவேயடியேனையாண்டுகொள்வாயே (82)

மையலேயூட்டுமின்னார்கடங்கள்மயக்கத்திலாழ்ந்தவனாகி
யையனேயாசைக்காற்றினினுழன்றிங்கழிந்தனனாக்ஷியப்பாவே
பொய்யதாமுலகிற்புதுமையேநோக்கியின்னமுநாட்களைப்போக்கா
துயவகையருளாயொப்பிலாக்கருணையுளந்தனிற்கொண்டவென்னிறையே. (83)

மொழிந்திடும்பெரியோர்வார்த்தையினளவைமூதறிவுடையரேயறிவர்
இழிந்தசொல்லுல்கிலறிவிலாரெண்ணியேங்கியேதிரிந்திடராழ்வர்

வழிந்தபேரன்பாற்பழவடியாருனைவாழ்த்தியேபோற்றுதல்போலிங்
கழிவிலாக்ஷீசாவடியனும்வாழ்த்தவேண்டினேனருள்செய்வாயரசே. (84)

மோகமேபெரிதாயெண்ணியெத்தினமும்மூர்க்கனாய்ப்பேதையேனற்ப
போகமேநினைவாய்ப்புண்ணியனினையாப்புலையனேனாகிலுமந்தோ
சோகமேதோன்றாநிலையினையடைந்துதொண்டராய்வாழுனல்லடியார்
ஆகமேகோயிலாகவாழ்ந்தருளுமாக்ஷியப்பாவெற்குமருளே. (85)

மௌனமாவணையிற்றூங்காதுதூங்கும்மாதவரடிசார்ந்தில்லேன்
யௌனமிங்கென்றுனிலையெனவெண்ணியந்தநாளனைத்தையுமொழித்தேன்
ஔவியங்கொண்டேன்பிறர்பொருடனக்கேயன்பொருசிறிதுமிங்கில்லேன்
செவ்வியவருளையீந்திடாயாகிற்சிறியனேன்செய்வதிங்கென்னே. (86)

யானைதன்றலையிற்றானாகமண்ணையெடுத்தடித்துக்கொள்ளல்போல
ஈனனேன்யானுமெவற்றையுமெனதென்றெண்ணியேநைந்திங்குநொந்தேன்
தீனனேனானேன்தீவினைபோக்கித்தெய்வமேநின்கழல்காட்டி
மோனமேதந்திங்கென்னையாண்டருள்வாய்முக்கணாவாக்ஷியப்பாவே. (87)

யோகமேநோக்கிநின்னருளடியாரெங்குமோர்படித்தாகநின்றார்
போகமேவேண்டிப்பொய்ம்மையேபெருக்கிப்பொய்யனேனேதும்பெற்றில்
நாகமேயாரமாகநாளும்வாழ்நாதனேவாக்ஷியப்பாவென் [லேன்
மோகமேபோக்கியேகமாய்னோக்கமோனமுமீந்தருள்வாயே. (88)

வந்துநின்கோயில்வாயில்வாசம்நீங்கிடாதுன்றிருவடியைப்
பந்தியாய்நின்றுநின்னன்பரெல்லாம்பாடியுமாடியுந்தொழுதார்
பந்தமாம்பிறப்பிற்பாவியேனழுந்திப்பரகதிதன்னையுமறந்தேன்
எந்தையேயாக்ஷியீசனேயிந்தயேழையையாளலுன்கடனே. (89)

வாழ்குதுமெனவேநினைந்துலகோர்கள்வரிசையும்வண்மையுநினைந்தே
வாழ்பவரில்லையெனநினைவோர்தம்வாழ்வதுபோவதைத்தெரிந்தும்
ஆழ்பவம்போக்கவப்பனேவாக்ஷியீசனேயறிந்திலேனேழை
தாழ்ந்திடாதென்னையாண்டுகொள்வாயேதயவுடனென்னுடையானே. (90)

விருந்திலோர்க்கில்லைபொருந்தியவொழுக்கமென்பதைவிளம்பக்கேட்டும்
வருந்தியுமுன்றனடியவர்தம்மைவகையுடனுபசரிக்கில்லேன்
பொருந்தியுன்னடியைவாழ்பவரிடத்துப்பொருந்துமெய்யருள்தனையுடையோ
யருந்தவர்வாழ்வேயாக்ஷியப்பாவிவ்வடியனையாளலுன்கடனே. (91)

வீழ்ந்திடாதடியேன்மாதரார்மயலில்வினைகளெல்லாமுனீபோக்கிப்
பாழ்ம்பிறப்பிறப்பிற்படாதுன்றன்பதநிழறன்னிலேயென்றும்
வாழ்ந்திடும்வாழ்வைவகையுடனெனக்குமருளவேவேண்டினனெந்தாய்
தாழ்ந்திடாதின்றேதக்கவாறருளாயாக்ஷியப்பாவென்றனரசே. (92)

வெவ்வியபிறப்புமிறப்புமானேய்கள்வினைவழிவந்திட்டாலும்
செவ்வியவுன்றன்சீரடிதன்னைச்சேர்ந்தவர்தமக்கென்றும்வாரா
ருதவ்வமில்லருளையீந்தின்றிங்கென்னையெந்தையேகாத்திடாயாகிற்
கவ்வியமலத்தைப்போக்கிடும்வழியைக்கண்டிலேனுகூதியப்பாவே. (93)

வேகவேவினையால்வேதனேயென்னைவிட்டுநீவேடிக்கைபார்க்கில்
போகவும்வழிதான்புண்ணியாவுண்டோபுலையனேன்றனக்குமிங்கரசே
ஆகவேயெந்தாய்போதமேநல்கியாண்டிடலுன்னருட்பாரம்
பாகமோர்பாவையுடையவாகூத்சாபற்றினேனுன்னடிதனையே. (94)

வையகந்தன்னிலுன்னருடன்னைவாய்மடுத்துண்ணுதபேர்கள்
பொய்யகந்தன்னுற்புதுமையேநோக்கிப்போதமிங்கிழந்துழல்வார்கள்
மெய்யகந்தாங்கியுன்றிருவடியைமேவவேவாசைகொண்டேன்யான்
துய்யனேயென்னையாண்டருள்வாயேதுணையிலேனுகூதியப்பாவே. (95)

வாழியுன்கழல்கள்வாழியுன்புகழ்கள்வாழிநின்னருட்கோலங்கள்
வாழியென்னுளும்நின்னிடப்பாகம்வளருமென்தாயென்றும்வாழி
வாழியென்னுளுமுன்னையேனுக்கிவாழ்ந்திடும்நந்தியெம்பெருமான்
வாழியென்னுளும்பல்வளனிறைந்தேதவாழுமச்சிற்றபாக்கம். (96)

வாழியென்னுளுமுலகெலாமுன்னர்வழுத்திடுமுன்முதற்பிள்ளை
வாழியென்னுளும்வடித்ததோர்வேலைப்பிடித்திட்டவேடுவர்கோமான்
வாழியென்னுளும்வானவர்கோனீந்தமங்கையாந்தெய்வயானை
வாழியென்னுளும்வள்ளிநாயகியும்வண்மையாயெமக்கருளீந்தே. (97)

வாழியென்னுளும்வார்கடலுலகிற்றிருஞானசம்பந்தராசர்
வாழியென்னுளும்வார்கடலுலகில்வண்டமிழ்நாவினுக்கரசர்
வாழியென்னுளும்வார்கடலுலகில்வன்றொண்டர்சுந்தரமூர்த்தி
வாழியென்னுளும்வார்கடலுலகில்மாணிக்கவாசகவள்ளல் (98)

வாழியென்னுளுமுன்றன்வார்கழலைவழுத்தியேமெய்யதுவுருக
வாழியெந்தாயேவாழியெம்மரசேவாழிநற்பொதுனடத்தரசே
வாழிமுக்கண்ணுவாழியெம்முதல்வாவாழியுன்னருளென்றும்வாழி
வாழியென்றழுதுப்பாடியானந்தமாகியேநிற்குநல்லடியார். (99)

வாழிநின்சீரைநினைந்தவரெல்லாம்வாழியென்னுளுமுன்னருளும்
வாழிநின்பேரைப்பேசினரெல்லாம்வார்கடலுலகினிலென்றும்
வாழிநின்னடியர்பெருமையைநினைந்தோர்வாழ்வதிங்கென்றுமேயோங்கி
வாழியெங்குமன்னரும்மழையும்வளங்களுமறங்களும்வாழி. (100)

---



ஸ்ரீ சித்த சுத்தாநந்த சுவாமிகள்

அருளிய திருப்பாமாலைகள்

முற்றுப்பெற்றன.